THE VENERABLE VETERANS.

மூன்று பெரியோர்கள்.



HUME. ஹ்யூம். DADABHAI. தா தாபாய். WEDDERBURN. வெட்டர்பர்ன்.

# பிழைக்கும் வழி

## PRACTICAL LIFE

ஜி. எ. வைத்தியராமன், பி. எ, பத்திராதிபர்.

G. A. VaidyaRaman, B. A., EDITOR.

புஸ்தகம் 2. Vol. 2. | ஸாதாரண வஸ்ரு மார்கழிமீ—DECEMBER 1910. | ஸஞ்சிகை 12. No. 12.


## Practical Life.

A popular illustrated Tamil monthly magazine of general information and instruction devoted largely to agriculture, trade, industry, citizenship and popular, scientific and technical education.

RATES OF SUBSCRIPTION POST FREE.

| | *Inland.* Rs. A. P. | | *Foreign.* Rs. A. P. |
|---|---|---|---|
| Per annum ... | 4 0 0 | ... ... | 6 0 0 |
| Single copy ... | 0 6 0 | ... ... | 0 8 0 |
| Sample copy ... | 0 2 0 | ... ... | 0 3 0 |

RATES OF ADVERTISEMENT.

| | | | |
|---|---|---|---|
| 1 Page | ... | 5 0 0 | per month. |
| ½ do | ... | 2 8 0 | do |
| ¼ do | ... | 1 4 0 | do |
| Less than ¼ page ... | | 0 8 0 | per *inch* per month. |

The above rates are all *net* and subject to no discount whatever. Orders should be accompanied with advance.

**Notice to Contributors.**—The Editor solicits contributions on subjects relating specially to agriculture, trade, industry and popular, scientific and technical education. Articles intended for the journal should be written in plain colloquial Tamil on one side of the paper only and on half margin. All articles which may be accepted will be paid for on publication. It will be understood that the publishers may at their discretion republish in book form articles which have been paid for at the time of publication in the journal.

No money should be paid to any Agent. All remittances and letters should be addressed to the Publishers, Messrs. G. A. Vaidya Raman & Co., 3 & 4 Sunkurama Chetty Street, Georgetown, Madras.

## பிழைக்கும் வழி.

முக்கியமாய் விவஸாயம், வியாபாரம், கைத்தொழில், ப்ரஜாலக்ஷணம், வித்யா விஷயங்கள் அடங்கிய சகலருக்கும் உபயோகமான படங்களடங்கிய, ஒரு மாஸாந்தரத் தமிழ்ப் பத்திரிகை.

தபாற்கூலி உள்பட சந்தா விவரம்.

| | உள் நாடு. | | அந்நிய நாடு. |
|---|---|---|---|
| வருஷம் 1க்கு | .. 4 0 0 | .. | 6 0 0 |
| தனிப்பிரதி | .. 0 6 0 | .. | 0 8 0 |
| மாதிரி காபி | .. 0 2 0 | .. | 0 3 0 |

சந்தாப்பணத்தை ஒரு ஏஜெண்டினிடத்திலும் கொடுக்கக்கூடாது. சகலபணத்தையும் எங்களுக்கு நேரில் அனுப்பிவிடவேண்டும்.

விளம்பர விகிதங்கள்.

| | | | |
|---|---|---|---|
| 1 பக்கத்திற்கு | மாஸம் ஒன்றுக்கு | | 5 0 0 |
| ½ பக்கத்திற்கு | ,, | ,, | 2 8 0 |
| ¼ பக்கத்திற்கு | ,, | ,, | 1 4 0 |
| ¼ பக்கத்திற்குக் குறைந்தால் மாஸம் ஒன்றுக்கு அங்குலம் ஒன்றுக்கு | | | 0 8 0 |

**வியாஸம் எழுதுகிறவர்கள் கவனிக்கவேண்டியது.**

விவஸாயம், வியாபாரம், கைத்தொழில் விஷயங்களைப்பற்றி வியாஸங்கள் தேவை. அவைகள் ஒப்புக்கொள்ளப்பட்டால் பிரசுரமானதும், எழுதினவர்களுக்கு தக்க ஸம்பாவனை செய்யப்படும். ஒவ்வொரு வியாஸத்தையும் கடுதாசியின் ஒரேபக்கத்தில் ஒருபாதியை விட்டு மறுபாதியில் மட்டும் எழுதவேண்டும். பேசும் தமிழ்தான் தேவை. கடினமான தமிழ் உதவாது.

இந்தப் பத்திரிகையில் பிரசுரமாகும் வியாஸங்களுக்காக நிருபர்களுக்கு ஸம்பாவனை செய்திருக்கும் பக்ஷத்தில் அந்த வியாஸங்களை நாங்கள் எங்கள் இஷ்டப்படி எந்த விதம் வேணுமானாலும் மறுபடி பிரசுரிக்க அதிகாரமுண்டு என்பதை நிருப நேயர்கள் அறியவேணும்.

ஜி. ஏ. வைத்தியராமன் அண்டு கம்பெனி,
3 & 4, சுங்குராம செட்டித் தெருவு, மதராஸ்.

# பிழைக்கும் வழி.

## PRACTICAL LIFE.

புஸ்தகம் 2 | Vol. 2. — ஸாதாரணஞு மார்கழிமீ—DECEMBER 1910. — ஸஞ்சிகை 12. | No. 12.


## பொருளடக்கம்.



## CONTENTS.

## EDITORIAL NOTES.

## பத்திராதிபர் குறிப்புகள்.

**Tamil Typewriter.**

தமிழ் டைப்ரைட்டர்.—அச்சைபோல் எழுதுவதற்கு இங்கிலீஷ்பாஷைக்கு டைப்ரைட்டர் என்னும் யந்திரம் வெகுநாளாய் ஏற்பட்டிருக்கிறது. அதனுடைய உபயோகம் எல்லாருக்கும் தெரிந்தவிஷயமே. கையினல் எழுதுவது அநேகமாய் நின்றுபோய் அநேக ஆபீஸ்களிலும், கம்பெனிகளிலும் டைப்ரைட்டரைக் கொண்டு அச்சுப்போல் எழுதிவருகிருர்கள். தமிழ்பாஷைக்கு இவ்விதமான கருவி ஏற்படுத்தவெகுநாளாய் சிரமப்பட்டு கடைசியாக இந்த பாஷைக்கும் டைப்ரைட்டர் ஏற்பட்டு விட்டது. தமிழ்பாஷையானது இங்கிலீஷைப்போல் 26 அக்ஷரங்களுக்குள் அடங்கமால், 330 அக்ஷரங்களுக்குமேல் உள்ளதாய் இருப்பதால் அதற்கு டைப்ரைட்டர் ஏற்படுத்துவது சிரமமே. இங்கிலீஷ் டைப்ரைட்டரில் 15 வருஷத்திற்குமேல் அனுபோகமுள்ளவரும் அதில்கியாதி பெற்றவருமாகிய தஞ்சாவூர் மிஸ்டர் டி. வி. சுந்தரம் அய்யர் தமிழுக்காக ஒரு டைப்ரைட்டரைக் கண்டுபிடித்திருக்கிருர். சென்னப்பட்டணத்தில் 5—6 பேர்கள் இந்தப் புதிய வித்தையைக் கற்றும் வருகிருர்கள். இங்கிலீஷ் டைப்ரைட்டரால் சொல்ப இங்கிலீஷ் படித்தவர்களுக்கு பிழைப்பு உண்டாயிற்று. இப்பொழுது ஐயர் உபகாரத்தால் இங்கிலீஷே தெரியாதவர்களுக்குக் கூட நல்ல பிழைக்கும் வழி உண்டாகிவிட்டது. இந்தக்கருவி தங்கள் காரியங்களை தமிழில் நடத்தும் மிராசுதாரர்களுக்கும், ஜமீன்தாரர்களுக்கும், நாட்டுக்கோட்டை செட்டிமார்களுக்கும், கோர்ட்டுகளுக்கும், தாசில்தார் கச்சேரிகளுக்கும், ஸப்ரிஜிஸ்ட்ரார் ஆபீஸ்களுக்கும் மிக உபயோகமுள்ளதாய் இருக்கும் என்பதில் ஸந்தேகமில்லை.

இந்தக்காலத்தில் பெரிய உத்தியோகஸ்தர்கள், வியாபாரிகள், பத்திராதிபர்கள், முதலியவர்கள் கவனித்து எழுதவேண்டிய விஷயங்கள் அளவற்றவைகளாயிருக்கின்றன. இவைகளை எல்லாம் அவரவர் ஸொந்தமாகவே செய்வதானல் அவர்கள் செய்ய வேண்டிய வேலைகளில் தினம் நாலில் ஒன்று கூட முடியாது. இதற்காக அவர்கள் என்ன செய்கிருர்களென்ருல் கோணல் எழுத்து என்று சொல்லப்படும் ஷார்ட்டு ஹாண்டு தெரிந்த ஒருவனை முன்னல் வைத்துக்கொண்டு அவர்கள் தங்கள் கடிதங்கள் முதலானவைகளை எவ்வளவு வேகமாய்ச் சொல்லலாமோ அவ்வளவு வேகமாய்ச்சொல்லிக் கொண்டே போவார்கள். முன்னல் உட்கார்ந்திருப்பவன் எஜமான் சொல்வதை யெல்லாம் கோணல் எழுத்தில் வெகு ஸுலபமாய் எழுதிவிடுவான் இப்படிச் சொல்லி முடிந்ததும் எஜமான் வேறு வேலையைப் பார்க்கப்போய் விடுவான். ஷார்ட்ஹாண்ட் ரைட்டர் அதாவது கோணல் எழுத்தில் எழுதினவன் எல்லாரும் எழுதுவதுபோல் ஸாதாரண அக்ஷரங்களில் எழுதி எஜமானுக்குக் கையெழுத்துப்போட அனுப்பிவிடுவான். பெரிய ஆபீஸ்களாயாவது அல்லது வியாபாரமாயாவது இருந்தால் அனுப்பும் கடிதங்களுக்கெல்லாம் நகல் வைத்துக் கொள்ளுவார்கள் அல்லவா? ஆதி நகல் கோணல் எழுத்தில் இருப்பதால் பிரதியை கையால் ஸாதாரண எழுத்தில் எழுதும் பக்ஷத்தில் வெளியே அனுப்ப ஒரு காப்பியும், ஆபீஸில் ரிக்கார்டுக்கு வைத்துக்கொள்ள ஒரு காப்பியும், ஆக இரண்டுகாப்பி எழுதும் படி ஏற்படுகிறது. இந்த உபத்திரவத்தை நீக்க இங்கிலீஷில் எழுதும் விஷயங்களுக்கு டைப்

ரைட்டர் என்னும் யந்திரம் ஏற்பட்டது. இதன் உதவியால் ஒரே தடவையாய் சில உபாயங்களால் ஐந்து ஆறு காப்பிகளை எடுத்து விடலாம். ஆகையால் இப்பொழுது அபாரமான வேலையுள்ள ஆபிஸர்களும், வர்த்தகர்களும், பத்திராதிபர்களும் கோணல் எழுத்து எழுதவும், டைப்ரைட்டர் யந்திரத்தில் அடிக்கவும் தெரிந்தவர்களை நியமித்து தங்களுக்கு ஆகவேண்டிய விஷயங்களை கோணல் எழுத்தில் எழுதச்சொல்லி பிறகு அதை டைப்ரைட்டரில் ஸாதாரண அக்ஷரத்தில் அடித்து, வேணுமானால் ஆபீஸ் ரிக்கார்டுக்கு ஒரு காப்பி வைத்துக்கொண்டு, பாக்கி காப்பிகளை அனுப்பவேண்டியவர்களுக்கு அனுப்புவது வழக்கம். இதேமாதிரியாக இப்பொழுது தமிழிலும் செய்யலாம். வேலூர் போலீஸ் பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயராயிருக்கும் மிஸ்டர் எம். சீனிவாஸ ராவ் தமிழ் பாஷைக்கும் கோணல் எழுத்து, அதாவது ஷார்ட் ஹாண்டு கண்டுபிடித்து, அதில் சிலபேர்கள் தேர்ச்சி அடைந்திருக்கிறார்கள். இதுவரையில் தமிழ் டைப்ரைட்டர் ஒன்று இல்லாமல் குறையாயிருந்தது. அந்தக்குறைவையும் மிஸ்டர் சுந்தரம் அய்யர் இப்பொழுது நீக்கிவிட்டார். இந்த யந்திரத்தை பெரிய ஜமீன்தாரர்கள் முதலியவர்கள் வாங்கிஉபயோகிப்பதால் அவர்கள் வேலையை சீக்கிரத்தில் முடிப்பதோடு, கண்போக சங்கிலி எழுத்தைத் தட்டுக் கெட்டுத்தடுமாறி வாசிக்கவேண்டிய உபத்திரவமும் நீங்கும். இந்த யந்திரம் தமிழ் விவகாரம் ஜாஸ்தியாயுள்ள ஸப்ரிஜிஸ்ட்ரார், தாசில்தார் இவர்கள் ஆபீஸ்களுக்கு, கவர்ன்மெண்டார் இங்கிலீஷ் டைப்ரைட்டரைப்போல் வாங்கி ஸப்ளைசெய்தால், வேலை துரிதமாய் நடப்பதோடு எல்லாருக்கும் ஸௌகரியமாயும் இருக்கும்.

**Tamarind Leaves as Manure.**

புளியஞ்சருகுகளும் உரமாகின்றன.—செங்கல்பட்டு ஜில்லா பருத்திப்பட்டு கிராமத்தில் ஒருவர் புளியஞ்சருகுகளை எருவாக வயலில் போட்டு அதில் ஸ்வர்ணவாரி நெல் சாகுபடி செய்ததாயும், அதனால் நல்ல மாசூல் கிடைத்ததாயும் எஸ். பத்மா என்னும் நிருபர் நமக்கு எழுதிய வியாஸத்தை புரட்டாசி மாஸத்து ஸஞ்சிகையில் 349-ம் பக்கத்தில் பிரசுரித்து, இந்த விஷயம் மிகவும் நூதனமாயிருப்பதாலும், புளியமரத்தினடியில் ஸாதாரணமாய் ஒரு பயிரும் வளராததாலும், மேற்படி நிருபர் எழுதிய விஷயத்தை தீர விசாரித்தே பழக்கத்துக்குக் கொண்டுவர வேணுமென்று சொன்னோம். இந்த விஷயமாக, சாகுபடியான நிலம் எப்படிப் பட்டது? புளியஞ்சருகுதானா, வேறு சருகு ஒன்றுமில்லையென்று நிச்சயமாகச் சொல்லக்கூடுமா? நிலம் எப்படிப்பட்டது? மேடா பள்ளமா? தண்ணீர்தானாகவே பாய்ந்ததா? அல்லது இறைத்துப் பாய்ச்சப்பட்டதா? என்று விவரமாய் எழுதும்படி நம்முடைய நிருபரை கேட்டுக்கொண்டதற்கு அவர் எழுதுகிறார்:—

"புளியமரம்தவிர வேறுகிடையாது. அருகாமையிலும் புளியமரங்கள்தான். மற்ற மரங்களின் சருகுகள் வரக் காரணமில்லை. ஜலம் இறைத்துப் பயிராக்கப்பட்டது. நன்செய், பள்ளதாக்கு, களிப்பு நிலம், அதைத் தவிரவேறு எருப்போடக் கூடவில்லை. அவ்வளவு அஸந்தர்ப்பமாயிருந்தது. எல்லாரும் புளியஞ் சருகுகளைச் சேர்த்துக்கொண்டும் இருக்கிறார்கள். தாங்கள் தாமதமின்றி யோசியாமல் கேட்பவர்களுக்குப் பதில் சொல்லலாம். அதைப்பற்றி விவஸாயிகளுக்குத் தெரிவித்து அவர்களே பரிசோதித்துப் பார்க்கலாம்."

இந்த விஷயம் கொஞ்சம் புதிதாயிருந்த போதிலும் புளியஞ்சருகுகளும் நல்ல எருத்தா னென்று சொல்ல ஹேது இருக்கிறது. இது விஷயமாக நம்முடைய பத்திரிகையின் அபி மானியாகிய திருநெல்வேலி ஜில்லா இனும் வெள்ளக்கால் வே. ப. திருமலையப்ப முத லியார் எழுதுகிறார் :—

"சென்ற புரட்டாசி மாஸச் சஞ்சிகை 349-ம் பக்கத்தில் குறித்த புளியஞ்சருகு சிரேஷ்ட மான பயிருணவுதான். எட்டுணையும் ஐயுற வேண்டாம். மஞ்சள், முதலிய கிழங்குவர்க் கப் பயிர்களுக்கு உரமாக வைத்துத்தக்க பல னுவதை கிராமாந்திரங்களில் பழகுவோர் அறிவர். சில கிராமங்களில் புளியஞ்சருகு போடாததால் அவை உரமல்ல வென்று உரைப்பது பிசகு. ஒரு கிராமவழக்கம் மற் ரேர்கிராமம் தெரிவதற்கன்றோ பத்திரிகை பரவவேண்டுமென்று தேசாபிமானிகள் ஓல மிடுகின்றனர். புளியமர நிழலில் பயிருண் டாகாதென்பது நிதர்சனம். ஆனல் எந்த மரத்து நிழலில்தான் பயிருண்டாகும். ஒரு மாநிழலிலும் பயிர் உண்டாகவே மாட்டாது. புளியமரத்தடி மண்ணைக் கூட உரமாக்கலாம். பலனடையும் மனிதருக்கு எப்படி சுத்தவாயு அவசியமோ, அவ்வாறே செடிகளுக்கும் சுத்த வாயுவும், சூரிய உஷ்ணமும் அவசியம். மனிதர் மூக்கால் சுவாசிப்பர். செடிகளோ இலைக் கண் ணறைகளால் சுவாசிக்கும் தன்மை பொருந் தியுள்ளன. உதாரணமாக க்ரோட்டன் தி னுசை எடுத்துக்கொள்வோம்: சூரிய ஒளி படாதபடியும், காற்றுப் பிரவேசியாத படியும் இருட்டறைகளில் வைத்து ஜலம் விட்டுவருவோம். சிறிதுகால மல்ல, சில தினம் சென்று பார்ப்போம். அந்த க்ரோட் டன் தினுசு இலை பசுமைமாறி வெளுத்து செடிமெலிந்து க்ஷேவலமாய்விடும். ஆகவே பயிர்களுக்கு சூரிய உஷ்ணம் அவசியமென் பது வெளிப்படை."

யாழ்ப்பாணத்தில் நன்செய்கைகளுக்குப் புளியஞ்சருகு எருவிடுவது ஸர்வசாதாரணமா யிருக்கிறதாக யாழ்ப்பாணத்துப் பத்தி ராதிபர் ஒருவரும் எழுதியிருக்கிறார். ஷை சருகு கிடையாதபோது பணம்கொடுத் தாகிலும் தூரத்திலிருந்து விவஸாயிகள் சருகு களைத் தருவிக்கிறார்களாம். இதனல் ஓரி டத்தில் பூர்வீகமான வழக்கம் மற்றொரு இடத்தில் நவீனமாய்த் தோன்றுகிறது. இதேமாதிரி இன்னொரு திருஷ்டாந்தத்தை நம்முடைய நேயர்கள் அறிவார்கள்.

இப்பொழுது புதுமுறையாக கையாளப் பட்டுவரும் நெல் ஒற்றை அலகு நடவானது கிருஷ்ண ஜில்லா கங்கிப்பாட் என்னும் ஊரி லும், வங்காளத்தில் மைமன்ஸிங்க் என்னும் இடத்திலும், புராதன வழக்கமாயிருந்து நம க்கு ஸமீபத்தில்தான் தெரிந்தது. இவைகள் போன்ற இன்னும் அநேக நல்ல விவஸாய முறைகள் அங்கங்கே வழக்கத்திலிருக்கலாம். கண்ணும் கருத்துமாய்மட்டும் பார்த்து வரும் பக்ஷத்தில் சாஸ்திர ஆராய்ச்சியால் புதிதாய் ஏற்படும் முறைகளோடு பழைய முறைகளிலும் சிலமேன்மையானவைகள் என்று ஏற்படலாம். ஆகையால் ஒவ்வொரு இடத்துப்பயிர்செய்யும் முறைகளையும் இப்பொழுது நடக்கிறபடி எழு திப்பத்திரிகைகளில் பிரசுரித்தால் பத்திரி கையை வாசிப்பவர்கள் நூதனமாய்த் தோன் றும் விஷயங்களை கவனிப்பார்கள். பிறகு அதை ப்பற்றி விசாரணை செய்யத்தொடங்குவார்கள். இப்படிச் செய்வதால் பலபேர்கள் கூடி ஒரு விஷயத்தை யோசிக்கும்பொழுது மூலை முடுக் குகளில் உள்ள விஷயங்கள் யாவும் வெளிவந்து விடும். கடைசியில் இது நல்லது, இது கெட் டது என்று ஏற்படும். விவஸாய அபிவிருத்தி யில் ஊக்கமுள்ளவர்களுக்கு நல்ல ஞானமும், லாபமும் கிடைக்கும். இந்த நோக்கத்துடன் தான் நாம் குறிப்பிட்ட இடங்களில் சாகுபடி முறைகளை நடக்கிறபடி நம்முடைய பத்திரி கையில் பிரசுரித்து வருகிறோம். இப்படிப் பட்ட வியாஸங்கள் பத்திரிகையில் பிரசுரமா கும்போது சிலபேர்கள், "என்ன இது, தெரிந்த விஷயங்களையே போடுவானேன், பழங்கதை கள்" என்று எண்ணலாம். இப்படிச்செய்வ தின் கருத்து என்னவென்றால் "ஓட்டைச் சட்டியில் சர்க்கரை இருக்கும்" என்பதே. ஆகையால் நம்முடைய நேயர்கள் அங்கங்கே உள்ள விவஸாய முறைகளைப் பத்திரிகையில் பிரசுரஞ்செய்ய எழுதவேணுமாய்க் கேட்டுக் கொள்ளுகிறோம். வியாஸங்கள் பிரசுரமான தும், நிருபர்களுக்கு வழக்கம்போல் ஸம்பா வனை செய்யப்படும்.

## JOINT STOCK BUSINESS IN SOUTH INDIA.

BY
DEWAN BAHADUR K. KRISHNASWAMI RAO, C.I.E.
*Late Dewan of Travancore.*

## தென் இந்தியாவில் ஜாயிண்ட் ஸ்டாக் வியாபாரம்.

இந்தியாவின் க்ஷேமமானது விவஸாய வியாபார அபிவிருத்தியைப் பொறுத்திருக்கிறதென்பதை ஒருவரும் மறுக்க மாட்டார்கள். ஸொந்தமாகவே ஒருவரே வியாபாரம் செய்யக் கூடிய பணமும் திறமையுமுள்ளவர்கள் ரொம்ப இல்லே. ஆகவே பெரும் முதலாளிகளும், திறமையுள்ளவர்களும் சேர்ந்தாலொழிய மேலே சொன்ன விஷயங்களில் அபிவிர்த்திக்கு இடமில்லே. ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும் நூற்றுக்கணக்கான கோடீசுவரர்களிருக்கிறார்கள். இவர்கள் வேறொருவருடைய ஒத்தாசை யன்னியில் ஏராளமான முதல் போட்டு புதுத்தொழில்களை தனித்தனியாகவே ஸ்தாபிக்கக் கூடும். அப்படியிருந்தும் அங்கெல்லாம் எல்லா முக்கிய கைத்தொழில்களுக்கும் பங்குகளாகப் பணம் போட்டு கம்பெனிகளாகச் சேர்ந்து நடத்தி வருகிறார்கள். ஆகவே, இந்தியாவில் வியாபாரம் செய்வதற்குப் பங்குகள் சேர்த்தே ஆக வேண்டும். சென்ற 4, 5 வருஷங்களாக பல காரியங்களுக்கு அநேக ஜாயிண்ட் ஸ்டாக் கம்பெனிகள் ஏற்பட்டிருக்கின்றன. ஆனால் இவைகளில் அநேகம் முன்னுக்கு வந்ததாகத் தெரிய வில்லே. இப்படி முன்னுக்கு வராததற்கு அடியிற்கண்ட விஷயங்களே முக்கிய காரணங்களாகும்.

முதலாவது, ஒருவியாபாரத்துக்கு வேண்டிய முதல் தொகையை ஆரம்பத்தில் குறைத்தே கணக்குப் போடுகிறார்கள். இதற்குக் காரணமென்ன வென்றால், கம்பெனியை ஆரம்பிக்கிறவர்கள் ஆரம்பத்திலேயே வியாபாரத்துக்கு ஏராளமான பணம் வேணுமென்று சொன்னால் சேருகிறவர்கள் பங்கு போடயோஜிப்பார்களென்றும், வியாபாரத்தைத்தொடங்கி லாபம் வருமென்றுதோன்றிவிட்டால் பங்குகள்வந்து குவிந்து விடுமென்றும் நினைக்கிறார்கள். ஆனால் இப்படி எண்ணுவது பிசகென்றே அநுபவ ஸித்தமாக ஏற்படுகிறது. வேண்டிய பணமில்லாமல் வியாபாரத்தைத் தொடங்குகிறதைப் பார்க்கிலும் அதைத் தொடங்காமலிருப்பதே நலம். ஏனென்றால் வியாபாரத்தைத் தொடங்காமலிருப்பதால் தேசத்துப் பூர்வ ஸ்திதிக்கு ஹானியொன்றுமில்லே. தொடங்கி நஷ்டம்வந்து விட்டால் பிறகு வெகு காலத்திற்கு கம்பெனி வியாபாரமென்றால் ஜனங்கள் அஞ்சி அதனால் தேசம் லகுவில் முன்னுக்கு வராது.

இரண்டாவது, பங்குகள் எடுத்துக்கொண்டவரிடத்திலிருந்து அவர்கள் கொடுக்கவேண்டிய தொகையை முழுமையும் உடனே வசூல் செய்வதில்லே. பங்குகளை யெடுத்துக்கொண்டவர்கள் செல்லான தொகைபோக பாக்கிப் பணத்தை எப்பொழுது வேண்டுமானாலும் செலுத்தக் கடமைப் பட்டிருந்தபோதிலும் பணத்தை வசூல் செய்யாததனால் அநேக தொந்திரவுகள் ஏற்படுகின்றன. கம்பெனிகளில் பங்குகளெடுத்துக் கொண்டால் பங்குப் பணத்தை கம்பெனியார் தவணைகளாகக் கேட்கலாம். ஷேர் ஹோல்டர் அதாவது பங்காளி, முதல் தவணை கொடுத்த பிறகுகம்பெனியார் இரண்டாவது தவணைப் பணம் கேட்கும் போது காலவித்தியாஸத்தினால் அதைக் கொடுக்க அசக்தனாய் விடுகிறான். சிலவேளைகளில் முதலில் பங்கெடுத்தவன் இறந்துபோயிருக்கலாம். அவனுடைய வார்ஸுகளைக்

கம்பெனியார் தவணைப்படி பணம் கட்ட வேண்டுமென்று சொன்னால் அவர்களுக்கு இஷ்டமிருக்கிறதில்லை. சில வேளைகளில் கொடுக்க முடியாதவர்களாயு மிருக்கிறார்கள். தவிர, அநேகம் ஷேர் ஹோல்டர்கள் தவணைப்படி பணம் செலுத்தக் கூடியவர்களாயிருந்தாலும் பணத்தைக் கொடுத்தால் நல்ல லாபம் வருமென்று நிச்சயமாய் ஏற்பட்டாலொழிய பணத்தைக் கொடுக்கப் பிரியப்படுகிறதில்லை. ஆகையால் இப்படிப்பட்ட தொந்திரவுகளில்லாமல் ஒரு வியாபாரம் தொடங்க வேணுமானால் பங்குப் பணம் முழுவதும் வசூலான பிறகே தொடங்குவது நல்லது.

மூன்றாவது, அநேகம் கேஸுகளில் வியாபாரத்தில் அநுபோக மில்லாத வித்தியாதுரர்கள் வியாபாரத்தைத் தொடங்குகிறார்கள். இவர்கள் வியாபாரத்தைப் பற்றிப் புஸ்தகங்களில் படித்திருக்கலாம். ஆனால் வியாபாரத்தில் லாபமடைவதற்கு அனதைப்பற்றிய அநுபோகம் வேண்டும். அது மேலே சொல்லிய வித்தியாதுரர்களிடத்திலில்லை.

ஆரம்பத்தில் சிலவேலைகளில் நஷ்டம் வரத்தான் செய்யும். ஆனால் இதைப் பொதுவாய் ஷேர்ஹோல்டர்கள் ஞாபகத்தில் வைக்கிறதில்லை. அதனால் அவர்களுக்குத் தொடங்கிய வியாபாரத்தில் அதிருப்தியுண்டாகி வியாபாரத்தில் கஷ்டங்கள் ஏற்படுகின்றன.

நாலாவது, எல்லா ஜாயிண்ட் ஸ்டாக் கம்பெனிகளும் டைரெக்டர்களால் நடத்தப்பட்டு வருகின்றன. கம்பெனிகளின் ஆரம்பத்தில் டைரெக்டர்கள் வருமானமே யில்லாமலோ, அல்லது ஸ்வல்ப வருமானத்துக்கோ உழைக்க வேண்டியிருக்கிறது. ஒருவன் வருமானமில்லாமலாவது அல்லது ஸ்வல்ப வருமானத்துக்காவது உழைக்கவேண்டுமானால் அவன் எடுத்துக்கொண்ட காரியத்தில் பொறுப்புள்ளவனாகவோ அல்லது தேசாபிமானியாகவோ யிருக்கவேண்டும். இந்த நற்குணங்கள் இனிமேல்தான் நம்மவர்களுக்குள் வெகுவாய் உண்டாகவேண்டும். ஸ்வதேசி ஸ்வதேசியென்று பேச்சு முழங்குகிறதே தவிர காரியத்தில் ஒன்றையும் காணோம். கம்பெனி விஷயமாகப் பேசுவதற்கு மீட்டிங்கு கூடவேண்டுமென்றால் வரவேண்டிய பங்காளிகள் வராததால் மீட்டிங்குகளை வாரம் வாரம் ஒத்திப்போடவேண்டியதாயிருக்கிறது. நம்மவர்களில் பொறுப் பில்லாததைக் காண்பிக்க வேறு என்ன வேண்டும்? சுய நலத்தை விட பொது நன்மையே பெரிதென்று எண்ண நாம் இனிமேல்தான் கற்றுக்கொள்ள வேண்டும். ஒருகம்பெனியில் ஒரு சேவகனை நியமிக்க ஷேர்ஹோல்டர்கள் எவ்வளவு சிரமம் எடுத்துக் கொள்ளுகிறார்களோ அவ்வளவு சிரமம் ஒரு டைரெக்டர் நியமிப்பதிலாவது அல்லது வேறொரு உத்தியோகஸ்தரை நியமிப்பதிலாவது எடுத்துக் கொள்ளுகிறதில்லை. வேலையைச் செய்கிறவர்கள் ஏதோ அவர்களால் கூடியமட்டில் நிர்வகித்து வருகிறார்களென்றே ஷேர் ஹோல்டர்கள் சந்தோஷப்படுகிறதில்லை. வேண்டிய அளவில் கட்டின வீட்டிற்குப் பழுது சொல்லுகிறார்களே யொழிய ஒரு வேலையை இப்படிச் செய்தால் ஸரிவர முடியுமென்று சொல்வாரைக் காணோம்.

ஐந்தாவது, கம்பெனிகளுக்கு யோக்கியதையாயும், புத்திசாலித்தனமாயும் நிலை நின்று நிர்வகித்து வேலை செய்யக் கூடிய சிப்பந்திகள் அகப்படுவது ரொம்ப துர்லபமாயிருக்கிறது. சிப்பந்திகள் கேட்கும் சம்பளமும், கம்பெனியின் வருமானமும், மலையும் மடுவும் போலிருக்கின்றன. சுதேசிக் கம்பெனிகளில் வேலையாயிருப்பவரில் அனேகர் எப்பொழுதும் வேறுவேலை எங்கே அகப்படுமென்றே பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். ஒரு குறிப்பட்ட

காலத்திற்கு உழைக்கவேண்டுமென்று ஒப்பந்தம் செய்து கொண்டாலும், வேலைக்காரன் முழுமனதோடுவேலை செய்வானென்று சொல்ல முடியாது. இப்படி முழுமனதோடு வேலை செய்யாதவனை வைத்துக்கொண்டிருந்தால் நாளடைவில் நஷ்டந்தான் வரும். தவிர, அவன் பிறரையும் கெடுத்து விடுவான்.

ஆறுவது, ஷேர் ஹோல்டர்கள் தங்கள் கம்பெனி விஷயத்தில் எவ்வளவு சிரத்தைக் காட்டலாமோ அவ்வளவு சிரத்தைக் காட்டுகிறதில்லை. சிரத்தைக் காட்டாததோடு நிற்காமல் அவர்களும் ஷேர் ஹோல்டர்களோ என்று கேட்பவர்கள் ஸந்தேகப்படும்படியாக தங்களுடைய கம்பெனியைப் பற்றி இகழ்ந்தும் பேசுவதைக் காண்கிறோம். ஸாதாரணமாக ஒரு கம்பெனியில் குற்றம் குறையில்லாமல் எல்லாம் ஸரியாய் நடக்கும் பொழுதே அந்தக் கம்பெனியைப் பற்றிய விஷயங்களை ஜனங்கள் லகுவில் நம்புகிறதில்லை. புதிதாய் ஏற்பட்ட கம்பெனிகளில் நல்ல லாபம் வருவதற்கு முன்னால் எவ்வளவோ கஷ்டப்பட்டு சிரமப்படவேண்டியிருக்கிறது. இவைகளை யெல்லாம் ஜனங்கள் அறிகிறதில்லை. அவஸரப்பட்டு அதிருப்திப் படுகிறதால் வேலை பாழாய்ப் போகிறது.

மேலே சொல்லிய குற்றம் குறைகளெல்லாம் நாம் புதிதாய் கைத்தொழில், வியாபாரம் முதலிய விஷயங்களில் ப்ரவர்த்திப்பதினால் நேரிடுகிறவைகள். இவைகளைப் பார்த்து நாம் பயந்து போகக்கூடாது. ஒரு வியாதி இன்ன காரணத்தால் வந்திருக்கிறதென்று கண்டுகொண்டு விட்டால் அதுவே வியாதியைப்பாதி சொஸ்தப்படுத்தினதாகஆகிவிடும். அதுபோல நம்மிடத்தில் என்ன குற்றம் குறைகளிருக்கின்றனவென்று தெரிந்துகொள்வதே அவைகளை நீக்க ஸரியான வழி. நாம் முன்னுக்கு வரவேண்டுமானால் விடாமுயற்சி வேண்டும் பிற்கால லாபத்தை உத்தேசித்து தற்காலம் நஷ்டப்படத் தயாராயிருக்கவேண்டும். பலபேர் சேர்ந்து ஒத்துழைக்கவேண்டும். பரஸ்பர நம்பிக்கைவேண்டும் சிறு குற்றங் குறைகளை மன்னித்து விடவேண்டும். எடுத்த காரியத்தில் ஜெயம் நிச்சயமென்று எப்பொழுதும் மனம்தளராமல் எண்ணவேண்டும். பொது நலத்தை நாடி சுய நலத்தை மறக்கவேண்டும். இவைகளெல்லாவற்றையும்விட நாம் இப்பொழுது செய்வதுபோல் செய்யாமல் ஒப்புக்கொண்ட வேலையை நன்ருய்ச் செய்யவேண்டும். அப்படிச் செய்வது நம்முடைய பொறுப்பு, நம்முடைய கடமை, என்று எண்ணவேண்டும்.

கே. கிருஷ்ணஸ்வாமி ராவ்

---

**The Rain Tree of Peru.**

பெருதேசத்து மழை மரம்.—இந்த மரமானது தென் அமெரிக்காவிலுள்ள பெருதேசத்தில் உள்ளது. மரம் பருமனும், இலைகள் அடர்ந்தும் இருக்கிறது. இந்த மரத்தில் ஒரு அற்புதமான குணமிருக்கிறது. அதாவது, ஆகாயத்திலுள்ள நீராவியைக்குளிரச்செய்து, அம்மரத்தின் கீழ் மழையாகப் பொழிவிக்கிறது. நதிகளில் ஜலம் வற்றிப்போகும் கோடை காலத்தில்தான், அந்த மரத்தின் கட்டை மூலமாயும், இலைகள் மூலமாயும் ஜலம் எப்பொழுது பார்த்தாலும் 'கொட்டின வண்ணமாய் இருக்கிறது. இப்படிப் பெய்கிற ஜலமானது சிறு அருவிகளாக ஓடுகிறது. நல்ல அருங்கோடையில் ஒரு மரம் இருபத்துநாலுமணி நேரத்தில், 9 காலன் ஜலம் பெய்கிறது இப்படிப் பல மரங்களை வைத்துப் பயிர் செய்து அவைகள் மூலமாய் அருவிகளாக ஓடும் ஜலத்தை அணைகள் கட்டி தேக்கினால் ஸாகுபடிக்கு உபயோகப்படுத்தலாமாம். இந்த மரங்கள் எந்த தேசத்திலும், எந்த பூமியிலும் விருத்தியாகின்றன. இந்தியாவில் தண்ணீரில்லாமல் தவிக்கும் அநேக இடங்களில் இந்த மரத்தைப் பயிர் செய்து பார்க்கவேணும். இது விஷயமாய் நம்து ராஜதானி விவஸாய இலாகாக்காரர்கள் கொஞ்சம் சிரத்தை எடுப்பார்களென்று நம்புகிறோம்.

## HOUSEHOLD UTENSILS.

BY

M. C. S. ANANTAPADMANABHA RAU, M.A., L.T.,

*Assistant Professor of Physics, Presidency College, Madras.*

## வீட்டுப் பாத்திரங்கள்.



---

வீடுகளில் புழங்கப்படும் பாத்திரங்களில் சில மண்ணினால்செய்து சுடப்பட்டும், சில பூமியிலிருந்து வெட்டி எடுக்கும் ஒரு விதமான வழவழப்புடன் கூடிய மாக்கல் என்னும் கற்களால் ஸன்ன உளிகளைக்கொண்டு குடைந்து வேண்டிய உருவமாக்கப்பட்டும், வேறு சில தனி உலோகங்களாலும், அனேகம் பித்தளை முதலான கலப்பு உலோகங்களாலும் செய்யப்பட்டும் இருக்கின்றன. மண்பானை, கல்சட்டி முதலான மண்பாண்டங்களையும், கல்பாத்திரங்களையும் அடுப்பின்மேல் வைத்தால், அந்தப்பாத்திரங்கள் சீக்கிரம் சூடேறுவதும் இல்லை. நெருப்புக்குத் தூரத்திலுள்ள பாகங்கள் அதிகம் சுடுவதும் இல்லை. பால், முதலான மெதுவாக காய்ச்சவேண்டிய பதார்த்தங்களையும், காய்ச்சுவதால் சீக்கிரம் தீய்ந்து போகக்கூடிய தோசை முதலான பதார்த்தங்களையும், மண்ணினாலும், கல்லாலும் செய்தபாத்திரங்களிலேயே காய்ச்சுவதையும், பக்குவமாக்குவதையும் நாம் பார்த்திருக்கிறோம். இந்தப்பாத்திரங்கள் எளிதில் உடையுந்தன்மையன வாகையால் இவைகளை வெகு ஜாக்கிரதையுடன் உபயோகப்படுத்த வேண்டும்.

தாமிரத்தால் செய்த வென்னீர் அண்டாவையும், வெண்கலப்பானையையும், இரும்புச் சட்டியையும், இவைபோன்ற மற்ற உலோகங்களாலும், உலோகக்கலப்புகளாலும் செய்யப்பட்ட பாத்திரங்களையும், அடுப்பின்மேல் வைக்க, அவை சீக்கிரம் காய்ந்துபோவதுடன், அதிகச் சூட்டை பாத்திரத்திலுள்ள பதார்த்தங்களுக்குக் கொடுக்கின்றன. ஒரே வடிவமும், கனமும், உள்ளளவும், உள்ள மாக்கல் பாத்திரம் ஒன்றையும், பித்தளைப் பாத்திரம் ஒன்றையும் எடுத்து அவைகளில் முறையே ஒருபடி ஜலத்தை விட்டு, ஒரே நிதானமாய் எரியும் அடுப்பின்மேல் வைத்துக்காய்ச்சினால் ஒரு படி ஜலம் அரைப்படியாக சுண்டுவதற்கு பித்தளைப் பாத்திரத்தில் ஒரு மணிநேரம் செல்லுமானால், கல்பாத்திரத்தில் சுமார் 20 மணிக்கு மேல் செல்லும். உலோகங்களெல்லாம் உஷ்ணத்தை சீக்கிரம் கிரஹித்து தங்களில் அதிக தூரம் பரவச்செய்து மற்ற வஸ்துக்களுக்குக்கொடுக்கும் சக்தி யுள்ளன வாகையால் சமையலுக்கு அனேகமாய் உலோகங்களால் செய்த பாத்திரங்களையே உபயோகிக்கிறோம். அன்றியும் உலோகங்களை வேண்டிய அளவு ஸன்னத்தகடுகளாகச் செய்யமுடியுமாதலால், நமக்குவேண்டிய பாத்திரங்களை நாம் விரும்பிய கனமுள்ளனவாகவும், பரிமாணமுள்ளனவாகவும் செய்துகொள்ளலாம். மேலும் உலோகங்கள் உறுதி உடையனவாகையால் அவைகளால் செய்தபாத்திரங்கள் புழக்கத்தில் சீக்கிரம் உடைந்துபோவதில்லை. ஆகையால் அடிக்கடி ஊர்விட்டு ஊர்ப்பிரயாணம் செய்துகொண்டிருப்பவர்களும், அவஸரமாய் சமையல் செய்யவேண்டியிருப்பவர்களும், ஸன்னத்தகடுகளால் செய்யப்பட்ட பாத்திரங்களையே உபயோகிக்கவேண்டி இருக்கிறது. ஸமாராதனைகளிலும், சத்திரங்களில் நூற்றுக்கணக்கான ஜனங்களுக்கு சமையல் செய்யும்போதும், உலோகங்களால் செய்யப்பட்ட உறுதியான பாத்திரங்களையே உபயோகிக்கவேண்டும். மேலும் உலோகங்களால்

செய்தபாத்திரங்களை புளி, வண்டல் மண் முதலியவற்றால் தேய்த்துக்கழுவி பளபளப்பாகவும், பார்வைக்கு ரம்மியமாகவும், வைத்துக்கொள்ளமுடியுமாதலாலும், இப்படி சுத்திசெய்துவைத்த பாத்திரங்கள் அழகாய் காணப்படுவதினாலே மனதுக்கு ஒருவித சந்தோஷத்தைத் தருவதாலும், இந்த தேசத்தில் இந்தப்பாத்திரங்களையே உபயோகிக்க எல்லாரும் விரும்புகிறார்கள். மெருகு வைத்த திண்டுக்கல் வெண்கல டம்ளரைப்பார்த்து இதிலல்லவோ நாம் பால் முதலானவைகளைக் குடிக்கவேண்டுமென்று சொல்லுவதை நாம் எவ்வளவு தடவையோ கேட்டிருக்கிறோமே.

இரும்புத் தகட்டினால் செய்யப்பட்டு, பலவர்ண ஸாமான்கள் சேர்த்து உருக்கிய பீங்கான் மண் பூசிய, எனமல் பாத்திரங்கள் அன்னிய தேசங்களில் செய்து நம் தேசத்தில் அனேகமாய் விலையாகின்றன. இவை உலோகபாத்திரங்களைவிட ஸரஸமாயிருப்பதாலும், பழக்கத்திற்குப் புதிதாக வந்துக்கொண்டிருப்பதாலும் இவைகளை அனேகர் அதிக விருப்பத்துடன் உபயோகிக்கிறார்கள். இவைகளின் மேல்பரப்பு வழவழப்பா யிருப்பதால், அழுக்குகளை சீக்கிரம் போக்கிவிட முடிகிறது. அடுப்பின் மேல்வைத்தால், மேலேபடியும் புகைக் கரியையும் எளிதில் நீக்கமுடிகிறது. மேலும் இந்தப் பாத்திரங்களுக்குள் எவ்வித மான பதார்த்தங்களையும் வைக்கலாம். கச்சிப் போவதும் இல்லை, களிம்பு சேருவதும் இல்லை. ஆனால் பூசியமண் உதிர்ந்த இடத்தில் தென்படும் 'இரும்பு சீக்கிரத்தில் துருப்பிடித்து பாத்திரம் ஒட்டையாகிவிடுகிறது. உதிர்ந்த தூள்கள் ஆகாரத்துடன் கலந்து நம்முடைய தேகத்தில் சேர்ந்தால் விஷமென்று சிறந்த வைத்தியர்கள் சொல்லுகிறதால், இந்தப்பாத்திரங்களை அன்னிய தேசங்களில் அதிகமாக உபயோகிப்பதை தவிர்த்துக் கொண்டு வருகிறார்கள்.

வீட்டுப்பாத்திரங்களைச் செய்வதற்கு உபயோகப்படுத்தப்படும் தனி உலோகங்களாவன :—இரும்பு, செம்பு, வெள்ளீயம், அலுமினியம், காரீயம், வெள்ளி. செம்பு என்பதைத் தாமிரம் என்றும் தாம்பிரம் என்றும் சொல்லுவதுண்டு. நமக்கு உபயோகப்படும் கலப்பு உலோகங்கள் அனேகம் உள. அவைகளில் வெண்கலமும், பித்தளையும் முக்கியமானவை. பாத்திரங்களைப் பார்த்தாவது, கையிலெடுத்து கனம் முதலானவைகளை அறிந்தாவது, தட்டி தொனியை கவனித்தாவது, அந்தப்பாத்திரங்கள் எந்த உலோகங்களால் செய்யப்பட்டிருக்கின்றனவென்று எளிதில் சொல்லலாம்.

இரும்பின் நிறம் என்னவென்றால் அனேகர் கருப்பு என்றே சொல்லுவார்கள். இது பிசகு. இரும்புச் சட்டியையாவது, இரும்பு ஊசி அல்லது ஆணியையாவது, மேல் தூசி போகும்படி தேய்த்தபின் இரும்பின் 'நிஜ நிறம் தென்படும். தேய்த்த ஊசி மங்கலான ஒருவித வெண்மை நிறம் உடையதல்லவா? காற்றில் நீராவி கலந்திருக்கிறது. இரும்பைக் காற்றுப்பட வைத்திருந்தால் அது காற்றிலுள்ள பிராணவாயுவுடன் நாளடைவில் சேர்ந்து துரு என்று சொல்லப்பட்ட சிவப்பு நிறமுள்ள ஒரு பொடியாக மாறும். தேய்த்து பளபளப்பாய் வைத்திராத இரும்புப் பாண்டங்கள் மங்கலான செந்நிறமுடையனவாகத் தோன்றும். இரும்பு ஸாமான்களின்மேல் ஜலமும், காற்றும் படும்படியாக வைத்திருந்தால் ஒரு விதமான மஞ்சள் நிறமான துரு உண்டாகிறது. இரும்பு ஸாமான்கள் இம்மாதிரி அஜாக்கிறதையாக வைக்கப்பட்டிருந்தால், கெட்டியாகிய

இரும்பெல்லாம் நாளடைவில் துருவாகிப் பொடியாக விழுந்துபோகும். ஆதலால் தேய்த்த இரும்பு ஸாமான்களில் ஜலம் தங்காதபடி துடைத்துவைக்கவேண்டும். ஜலம் மேலே விழாமல் கவனித்து ஸரியான இடத்தில் வைக்கவேண்டும். கொஞ்சம் எண்ணெயை மேலே தடவிவைத்தால் பாத்திரம் துருப்பிடிக்காது. கூர்மையான ஓரங்களையுடைய அம்பட்டன் கத்திமுதலான கருவிகளை இப்படியே காப்பாற்றவேண்டும்.

செம்பின் நிறம் சிவப்பு. செம்பின் நிறம் காற்றினால் இரும்பைப்போல் மாறுவதில்லை என்றாலும், நாளடைவில் சிவப்பு நிறம் கொஞ்சம் மழுங்குகிறது. செம்புப் பாத்திரங்களை புளியால் தேய்க்க, செம்பின் நிறம் நன்குவிளங்கும். ஈயம் என்னும் பதத்தை இரண்டு வித உலோகங்களுக்கு உபயோகப்படுத்துகிறோம். ஒன்று வெண்மை நிறம் அதிகமாயும், மற்றொன்று வெண்மை நிறம் மழுங்கியும் இருப்பதால், முன்னதை வெள்ளீயம் என்றும், பின்னதைக் காரீயம் என்றும் சொல்லுகிறோம். இவ்விரண்டும் கொஞ்சம் நீல நிறம் கலந்துள்ளன. காரீயம் அதிக பளுவுள்ளது. அதை நகத்தால் எளிதில் கீரலாம். காரீயத் துண்டை காகிதத்தின் மேல் உரைத்தால், கரியகோடு விழும். இதனால் ஜனங்கள் காகிதப்பென்ஸில்களில் உபயோகிக்கப்படும் ஸன்ன உருண்டைக் குச்சிகள் காரீயத்தால் ஆனவை யென்று சொல்லுவதுண்டு. இது பிசகு. காகிதப்பென்ஸில் ஒருவித கரிப்பொருளால் ஆனது. வெள்ளீயமும் பளுவுள்ளதே. இதைத்தான் தகரம் என்றும் சொல்லுவதுண்டு. ஆனால் இந்த வெள்ளீயத்தால் முலாம் பூசப்பட்ட இரும்புத்தகடுகளையே 'தகரம் என்று ஜனங்கள் வழங்குகிறார்கள். இது காகிதத்தின்மேல் கருப்புக் கோடுகிழிப்பது இல்லை. காரீயம் புளிப்பு ஸாமான்களுடன் கலந்து ஒரு விதமான தித்திப்பான விஷ பதார்த்ததை உண்டாக்குவதால் காரீய பாத்திரங்களை உபயோகப்படுத்தக் கூடாது. காரீயமும், வெள்ளீயமும் சீக்கிரத்தில் உருகும் தன்மையையுடையன. அடுப்பின்மேல் வைக்கும்போது இவைகளால் செய்த பாத்திரங்களில் ஜலம் வைத்தே சுடவைக்கவேண்டும். ஆதலால் நெய் உருக்குவதற்கும், எண்ணெய் காய்ச்சுவதற்கும், ஈயப் பாத்திரங்களை உபயோகிக்கக்கூடாது.

அலுமினியம் என்னும் உலோகம் புதிதாக வழக்கத்தில் வந்துகொண்டிருக்கிறது. அது அதிக லேசானது. வெண்மை நிறமுடையது. இராணுவ இலாகாவில் சிப்பாய்கள் அடிக்கடி இடம் விட்டு இடம்பெயர்ந்து செல்ல வேண்டியிருப்பதால். இந்த உலோகத்தால் செய்யப்பட்ட லேசான பாத்திரங்களை வழங்குகிறார்கள். இந்தப் பாத்திரங்களுக்குக் கொடுத்த மெருகு அழிந்த பிறகு மறுபடியும் பளபளப்பாக்குதல் கஷ்டமாதலால் இந்த உலோகத்தினால் செய்த கூஜா முதலான ஸாதாரணமாக குடிப்பதற்கு உபயோகிக்கும் பாத்திரங்களை ஜனங்கள் விரும்புகிறதில்லை. உலோகக்கலப்புகளைப் பற்றியும், உலோகங்களின் முக்கிய குணதிசயங்களைப் பற்றியும் இன்னொரு ஸமயம் விவரிப்போம்.

எம். வி. எஸ். அநந்தபத்மநாப ராவ்.

---

"பிழைக்கும் வழி".—கார்த்திகை மாஸத்துப் "பிழைக்கும் வழி"ப் பத்திரிகையில் வழக்கம்போலவே அரிய பெரிய விஷயங்கள் பொதிந்து நிரம்பி இருக்கின்றன. மொத்தத்தில் "பிழைக்கும்வழி"யை விடாது படித்து வருவோர்க்கு அனுவசியமாய் எத்துறையிலாவது "பிழைக்கும் வழி" ஏற்படுமென்பது திண்ணம்.—"இந்து நேசன்."

---

## SOME MORE GREEN MANURES.

BY

B. L. DAVEY SINGH.

## இன்னும் சில பசுந்தாள் உரங்கள்.

போன அக்டோபர் மாஸத்து ஸஞ்சிகையில் பசுந்தாள் உரத்தைப் பற்றிப் பேசும்பொழுது முதல் முதலாக சணலைப்பற்றி விவரித்துச் சொன்னோம். இந்த வியாஸத்தில் இன்னும் சில பசுந்தாள் உரங்களைப்பற்றி விசாரிப்போம்.

### INDIGO.
### அவுரி.

பயிர் வகை.—இது கோதுப் பயிர் வகையைச் சேர்ந்தது.

பயிர் செய்யும் ஊர்கள்.—கர்நூல், கடப்பை, கிருஷ்ணா, கோதாவரி, கூடலூர், சேலம், திருச்சிஞப்பள்ளி முதலிய ஜில்லாக்களில் ஏராளமாய் விளைகிறது.

பயிராகக்கூடிய இடம்.—இது விசேஷமாய் மணல் சாரியான இடங்களில்தான் பயிராகும். தண்ணீர் தாராளமாய் வடிந்து போகும்படியாயிருக்கவேண்டும். இருமண் பாங்கான இடம் முதல் தரமானது. களிமண் பாங்கான இடங்களில் பயிராகிறதே யில்லை.

ஜலக் கட்டு.—தண்ணீர் கட்டுவதென்பதே கூடாது. அதிக ஜலம் இருந்தால் அவுரி சீக்கிரம் அழுகிப்போம்.

நன்செயில் பயிர் செய்யும் விதம்.—சணலைப் போலவே இதை வருஷம் முழுதும் பயிரிடுவது என்பது சாத்தியமல்ல. நன்செய் வயல்களில் பயறு தெளிப்பது போலவே நெல் அறுப்பாவதற்கு சுமார் 20 நாளைக்கு முன் அவுரி விதையைத் தெளித்துவிடவேண்டும். பிற்பாடு பூமியிலுள்ள சொற்ப ஈரத்தைக் கொண்டே பயிராகிவிடும்.

மற்ற உபயோகம்.—இது யாவருக்கும் தெரிந்ததே. துணிகளுக்கு நீலச் சாயம் போடுவதற்கு உதவும்.

### WILD INDIGO.
### கொழுஞ்சி.

இது அநேகமாய் எல்லா விஷயங்களிலும் அவுரியை ஒத்ததாகவே இருக்கிறது. அவுரி எந்த இடங்களில் பயிராகிறதோ அந்த இடங்களில் கொழுஞ்சியும் பயிராகும். அவுரியைப் போலவே இதையும் நெல் அறுவடையாவதற்குக் கொஞ்ச நாள் முன்னால் தெளிக்கலாம். ஆனாலும், வெடிப்புக் காணக்கூடிய நன்செய் நிலங்களிலும் கொழுஞ்சியைப் பயறுடன் கலந்து தெளித்தால், நிலங்கள் அவ்வளவு வெடிப்புக் காண்கிறதில்லை. ஏனென்றால் பயறு பூமியில் பரவி ஈரத்தைக் காத்துக் கொள்ளுகிறது. ஆகையால் கொழுஞ்சிக்குப் போதுமான ஈர மிருக்கும்.

ஏகர் ஒன்றுக்கு 4 பட்டணம் படி விதை போட்டால் போதுமானது.

வருஷா வருஷம் விதை போடவேண்டுமென்பது அவசியமல்ல. கோடையில் விழுந்த விதை சேற்றிலேயே கிடந்து வயல் அறுவடையானபின் முளைத்துவிடும்.

### DHANICHA.
### THE FUTURE GREEN MANURE.
### "தனிச்சா."

மேற்சொன்னவைகளை யெல்லாம் உத்தேசித்துப் பார்த்தால் நன்செய் நிலங்களிலேயே களிமண் பாங்காயிருந்தாலும் ஸரி, மணல்

பாங்காயிருந்தாலும் ஸரி, ஜலம் கொஞ்சமாயிருந்தாலும் ஸரி, ஜலம் அதிகமாகயிருந்தாலும் ஸரி, கொஞ்சகாலத்திற்குள் தழை எரு கொடுக்கக்கூடிய பயிர் ஒன்று இருந்தால் அது விவஸாயிகளுக்கு எவ்வளவு அனுகூலமாயிருக்குமென்று ஜனங்களுக்குச் சொல்லவும் வேண்டுமோ! இப்பேர்ப்பட்ட பயிர் ஒன்று வங்காள ராஜதானியில் மிகவும் உபயோகப் பட்டுவருகிறது. அதற்குப் பெயர் "தனிச்சா" அல்லது "தக்கப்பூண்டு" என்றும் சொல்லுகிறார்கள். இந்த விதையை மன்னார்குடியிலும், கும்பகோணத்திலும் இரண்டொருவர் வாங்கிப் பரிசோதித்துப் பார்த்திருக்கிறார்கள்.

மன்னார்குடியில் போன வருஷம் சம்பா அறுவடையாவதற்குக் கொஞ்ச நாள் முன்னால் பயறு தெளிப்பது போலவே ஒரு ஏகரா சுற்றளவுள்ள நாற்றங்காலில் ஒரு பட்டணம் படி விதை விதைக்கப்பட்டது. சில விதைகள் முளை கண்டன. சில விதைகள் முளைக்க வேயில்லை. முளைத்தவைகளில் சில விதைகள் நாலு ஐந்து நாளில் பட்டுப்போயின. ஆகையால் அவுரியைப்போல் இதையும் பயிர்செய்வதில் பிரயோஜனமில்லை என்பது தெளிவாயிற்று. இந்த வருஷம் அதே இடத்தில் ஜலம் வந்ததும், ஜலத்தை வெட்டிவிட்டு நெல் விதை விதைக்கப்பட்டது. ஆறு மாஸ காலமாக ஒளிந்து கொண்டிருந்த "தனிச்சா" விதைகள் நெல்முளைகாண்பதுடன்தாமும் முளைகண்டன. நாற்று வளரவளர இந்தப் பயிரும் ஓங்கி வளர ஆரம்பித்தது. நாற்றெல்லாம் 60 நாளைக்குள் ஜாடாவாகப் பறிக்கப்பட்டது. நாற்றுப் பறிப்பதுடன் இந்தச் செடிகளையும் கூடவே பறித்தாய்விட்டது. இந்த வருஷத்தில் ஒரு அடி ஜலம் ஒரே அடியாய் ஒருவாரம் வரையில் எல்லா வயல்களிலும் கன மழையினால் குறையாமல் இருந்தது. நாற்றெல்லாம் அழுகிவிடுமோ என்று பலர் பயப்பட்டார்கள். சிலர் மற்றொரு முறையும் விதை விட்டார்கள். அப்படிக்கெல்லாம் இருந்தபோதிலும் இந்த "தனிச்சா"வானது மிகவும் செழிப்பாக வளர்ந்திருந்தது. அந்த இரண்டு மாஸத்திற்குள் ஆறு அடி உயரம் வளர்ந்தது. இன்னும் கொஞ்ச காலமானால் எவ்வளவு வளருமோ தெரியாது. சுமார் ஒரு ஏகராவுக்கு பாரமான வண்டி ஆறு வரையிலும் கண்டது. ஆகவே ஆறுகளிலும், ஏரிகளிலும் ஜலம் வந்ததும் வயல்களில் ஜாடாவுக்குக் கொஞ்சம் ஜலத்தை சீராக விட்டு இந்த விதையைத் தெளித்தால் எப்படியானாலும் நாற்றைப் பிடுங்கி நடுவதற்கு குறைந்தது நாற்பத்தைந்து நாளேனும் ஆகும். இதற்குள் இந்தச் செடி போதுமான அளவு உயரம் வளர்ந்து விடும். நாற்றுப் பறிக்கும் முன் இந்தப் பயிர்களை அந்த அந்த வயல்களிலேயே போட்டு மிதித்து விட்டு நாற்றை நட்டுவிடலாம். இந்த விதையை வரவழைத்து எல்லாரும் உபயோகிக்க வேண்டியது அவசியமான காரியம். இந்தச் செடியானது உருவத்தில் "பெருநெட்டி"போல் இருக்கிறது. இலைகளைப் பார்த்தால் முள்ளு முருங்கைபோல் கொஞ்சம் மழுங்கின முள்ளும் எல்லாவிடத்திலும் இருக்கிறது. வேரைப் பார்த்தால் நெட்டியைப் போல் லேசாயிருக்கிறது. மேலும் வேர் வெண்மையாயும், மூன்று நான்கு பிளவு பட்டதாயுமிருக்கிறது. அநேகமாய் இதை ஒரு வகை "நெட்டி" யென்றே சொல்லலாம். இந்தப் பயிரை ஆடு மாடுகள் தின்கின்றன. இதை சணல்போல் சேகரித்து வைத்துப் பிற்பாடு எருவாகப் போடுவது என்பது முடியாதென்று புலப்படுகின்றது.

பி. எல். தேவிலிங்க்.

---

## THE MAT TRADE.

BY

A. RAMANATHAN.

## பாய் வியாபாரம்

பாய் அநேக இடங்களில் விசேஷமாய் நெய்யப்படுகிறது. பாய் நெய்யக் கோரைவேண்டும். கோரைக் கிழங்கென்னும் ஒருவகைக் கிழங்கிலிருந்து கோரை உற்பத்தியாகிறது. கோரைப் பயிருக்கு அடிக்கடி நீர்பாய்ச்ச வேண்டி இருப்பதால் கோரையை நஞ்சைப் பயிரென்றே சொல்லலாம். ஒரு ஏகராவில் கோரை நட்டால் ஸுமார் ரூ 250 முதல் ரூ 400 மதிப்புள்ள கோரை உற்பத்தியாகிறது.

கோரை மார் அளவு அதாவது 4 அல்லது $4\frac{1}{2}$ அடி உயர்ந்த பிறகு அறுத்துவிடப் படுகிறது. பிறகு இரண்டு பக்கங்களிலும் கூரான கத்தியால் கோரைகளை மெல்லியதாகப் பிளந்து வெயிலில் உலர்த்தி கட்டுகளாகக் கட்டிவைத்து விடுவார்கள். பிளந்த கோரைகளில் கொஞ்சங் கொஞ்சம் சிகப்பு, பச்சை, மஞ்சள் முதலிய சாயங்களிட்டு உலர்த்தி வைப்பார்கள். பாய்க்காரர்கள் கோரைகளை ஸன்னக் கோரை யென்றும், கனக் கோரை யென்றும் பிரித்து, உயர்ந்த பாய்கள் நெய்ய ஸன்னக் கோரையையும் மட்டப் பாய்கள் நெய்ய கனக் கோரையையும் உபயோகிக்கிறார்கள்.

பாய் நெய்தல் மிகவும் சுளுவான கைத்தொழில். பாய் நெய்தலை ஒரே தினத்தில் கற்றுக்கொள்ளலாம். ஆனால் பாயின் தலைப்புக் கட்டுவதை நன்றாய்க் கற்றுக்கொள்ள ஒரு வார சாவகாசம் வேண்டும். தவிர, கல்யாண காலங்களில் படியில் போடும் 'சொக்கட்டான்' பாய் நெய்தலை பாய் நெய்கிறவனுடைய உதவி இல்லாமல் கற்றுக்கொள்ள முடியாது. இந்த ரகம் பாய் நெய்ய கற்றுக்கொள்ள ஸுமார் ஒரு மாஸ காலம் பிடிக்கும். கனக் கோரை ஸன்னக் கோரையைக் காட்டிலும் விலை மட்டு. 6 அடி நீளமும் 3 அடி அகலமுமுள்ள ஸாதாரண கனக் கோரைப் பாயை நெய்ய 6 மணி நேரம் பிடிக்கும். அதற்குத் தலைப்புக் கட்ட 1 மணி செல்லும். இங்கே குறித்திருக்கும் காலத்தில் ஸ்னானம் செய்யும் காலமும் சாப்பிடும் காலமும் சேர்ந்திருக்கின்றன. நெய்ய வல்லமை உடைய ஒருவன் காலை 6 மணி முதல் ஸாயங்காலம் 6 மணி வரையில் இப்படிப்பட்ட பாய்கள் 2 நெய்கிறான். ஆனால் ஒரு சொக்கட்டான் பாய் நெய்ய ஒரு பகல் பிடிக்கிறது. கூலி, வேலையை ஒத்தது. முன்சொன்ன ரகம் பாய் நெய்தால் $2\frac{1}{2}$ முதல் 3 அணா வரையில் கூலி அகப்படுகிறது. பின் சொல்லிய ரகப் பாய் நெய்ய 5 அணா முதல் 6 அணா கூலி அகப்படும்.

(1) 6 அடி நீளமும் 3 அடி அகலமுமுள்ள கனக் கோரை பாயின் கரீது விலை.

| | |
|---|---|
| கோரை விலை | ரூ. 0—2—6 |
| கத்தாழை நார் | ரூ. 0—1—6. |
| நெய்யக் கூலி | ரூ. 0—3—0 |
| மொத்தம் | ரூ. 0—7—0 |

விற்கும் விலை 9 முதல் 12 அணா. லாபம் ஸுமார் நூற்றுக்கு 30 முதல் 40.

(2) 6 அடி நீளமும் $3\frac{1}{2}$ அடி அகலமுமுள்ள ஸன்னக் கோரைப் பாய் கரீது விலை.

| | |
|---|---|
| கோரை விலை | ரூ. 0—3—0 |
| இரட்டை தாருக்கு நார் விலை | ரூ. 0—2—0 |
| கூலி ... | ரூ. 0—3—6 |
| மொத்தம். | ரூ. 0—8—6 |

விற்கும் விலை. 12 முதல் 15 அணா. லாபம் முன்போல்.

(3) சொக்கட்டான் பாய் 6 அடி நீளம் 4 அடி அகலம்.

| | | |
|---|---|---|
| கோரை விலை | ரூ. | 0—4—0 |
| நார் ... | ரூ. | 0—2—0 |
| கூலி ... | ரூ. | 0—6—0 |
| மொத்தம் | ரூ. | 0–12—0 |

விற்கும் விலை ரூ 1-4-0 முதல் 1-8-0 வரையில் லாபம் நூற்றுக்கு 60 முதல் 90.

வட ஆற்காடு ஜில்லாவில் அநேக இடங்களில் பாய் நெய்கிறார்கள். வந்தவாசிப் பாய்கள் பேர்போனவை. ஆம்பூரிலும் அதைச் சுற்றிலும் பாய் நெய்கிறார்கள். நெய்யும் பாய்கள் மைஸூர் மாகாணத்தில் பவுரிங்கி பேட்டை கோலார் முதலிய இடங்களில் ஏராளமாய் விலையாகின்றன. பாய் நெய்து லாபமடைய விரும்புகின்றவன் கோரையை விலைக்கு வாங்கினால் தகுந்த லாபம் கிட்டாது. ஒரு ஏகரா நிலத்தில் கோரை உற்பத்தி செய்தால் அவனுக்கு வருஷ மளவும் போதுமான கோரை உற்பத்தியாகும். ஒரு ஏகராவில் உற்பத்தியாகும் கோரை சுமார் 3000 முதல் 4000 பாய்கள் நெய்ய போதுமானது. இத்துடன் புஞ்சை நிலங்களில் கத்தாழையும் பயிரிட்டு வந்தால் போதுமான கத்தாழை நார் கிடைக்கும். ஆகையால் பாய் நெய்கிறவன் கட்டாயமாய் தனக்கு வேண்டிய நாரை தானே உற்பத்தி செய்யவேண்டும். இல்லாவிட்டால் நார் குறைந்தபக்ஷம் ஐந்தில் ஒரு பங்கு லாபத்தையாவது சாப்பிட்டு விடும். கத்தாழையிலிருந்து நாரை எடுக்க கத்தாழையை அறுத்து கட்டாகக் கட்டி சேற்றில் ஊறும்படிசெய்து பிறகு நாரை எடுக்கிறார்கள். இப்படிச் செய்வதைக் காட்டிலும் கத்தாழைப் பாளை ஒவ்வொன்றையும் நன்றாய் நசுக்கி கத்தாழையிலுள்ள சோற்றை முக்கால் பங்கு முதலிலேயே எடுத்துவிட்டுப் பிறகு சேற்றில் ஊரவைத்தால் நாரை சீக்கிரத்தில் எடுத்துக்கொள்ளலாம். பாய் நெய்து வியாபாரம் செய்யும் ஒருவன் தன்னிடத்தில் மூன்றுவித ஆட்களை வைத்திருத்தல் அவசியம். அதாவது பாய் நெய்யும் ஆட்கள், கோரை கிழித்தல், உலர்த்தல், சாயம் இடல் இவைகளுக்கு ஆட்கள், நார் எடுத்துத் திரிப்பது முதலியவற்றிற்கு ஆட்கள். ஆனால் வீட்டிலிருக்கும் பெண்டுகளுக்கு நூல் திரிப்பதையும், பாயின் தலைப்புக் கட்டுதலையும் கற்றுக்கொடுத்தால் கூலிப்பணம் அதிகப்படாது. சில இடங்களில் பெண்டுகள் ஒழிந்த வேளைகளில் பாய்கள் கூட நெய்கிறார்கள்.

ஏ. ராமநாதன்.

---

## SOME USES OF THE BABUL.

BY

S. SOMASUNDARA DESIKAR.

## கருவையின் சில பிரயோசனங்கள்.

---

நம் நாட்டில் கருவைமரம் இன்னதென்றும் இவ்விடம் கிடைக்குமென்றும் நாம் சொல்ல வேண்டியதில்லை. ஆயினும் அதனுடைய பிரயோசனங்கள் இவைதானென அறிந்தவர்கள் சிலர்தான் என்று நிச்சயமாகச் சொல்லக்கூடும். ஆகையால் அதன் விவரத்தைக் கொஞ்சம் தெரிவிப்போம்.

இந்த மரத்தை நமது வயல் கரைகளிலும், வாய்க்கால் கரைகளிலும், ஆற்றோரங்களிலும் விசேஷமாகக்காணலாம். இது கரைகளைத் தவிர மற்ற இடங்களில் வளராதோ வென்றால் வளரக்கூடியதுதான். ஆனால் தோப்பாக வளர்ப்பதில்லை. திருச்சினாப்பள்ளி ஜில்லா உடையார்பாளையம் காட்டிலும் கொள்ளிடக்கரை ஓரமாயும் எதேஷ்டமாக இருக்கின்றன.

இதன் பிரயோசனங்களாவன. முதலில் தழை விழுந்து நிலங்களுக்கு ஸரியான எருவாகிறது. காய்கள் ஆடுமாடுகளுக்கு விருப்பமான ஆகாரம். அவைகள் இலைகளையும் தின்னும். இதன் கிளைகள் கூடைபின்ன உதவுகின்றன. இதனுல் பின்னப்பட்ட கூடைகள் பலமுடையனவாக இருக்கின்றன. மரம் கிளைகள் ஏர் கலப்பை, வண்டிச்சக்கரங்கள், பார்கள் முதலியவற்றிற்கு பலமானதென கொண்டாடப்படுகின்றன. சிலர் வீடுகளுக்கு சாத்தாகவும் உபயோகித்திருக்கிறுர்கள். இதிலிருந்து வடியும் பிசின் அதிக விலை போகக்கூடியதும், மருந்தாக உபயோகப்படக்கூடியதுமாய் இருக்கிறது. இங்கிலீஷ் பாஷையில் கருவை மரத்துக்கு அகேஷியா ஆராபிகா என்று பேர். பொட்டகிராப்பை கண்ணுடியினின்றும் பி. ஓ. பி. என்னும் அச்சுத்தாளில் கொண்டு வருவதைவிட விசேஷமாகக் கொண்டுவர இந்தக் கருவைப்பிசினை உபயோகிக்கலாம். நம்நாட்டுச் சிறுவர்கள் ஒரு காகிதத்தில் கோந்தினுல் எழுதிவிட்டு மேலே கரியைத்தடவி பிறகு ஜலத்தில் கழுவி எடுக்க கோந்துபட்ட இடம் எழுத்துப்படிந்திருக்கப் பார்த்ததில்லையா? அதேமாதிரிதான் பொட்டகிராப்பை கண்ணுடியிலிருந்து கடிதத்திற்கு கொண்டுவர இது நன்றுய் உபயோகப்படுத்தப்பட்டுவருகிறது. லண்டனில் மெஸர்ஸ் மார்ட்டன் கம்பெனியார் இந்தப்பிசினை பவுண்டு ஒன்றுக்கு ரூபாய் ஒன்று வீதம் விற்கிறுர்கள். இது மற்ற மருந்துகளுடன் சேர்த்து வயிற்றுப் போக்குக்கு கொடுக்கலாமாம். வெள்ளை விழுதலுக்கு இன்னும் சில மருந்துகளுடன் சேர்த்துக்கொடுக்கப்படுகிறது. இருமல் முதலியவைகளுக்கும் கொடுக்கலாம். இப்படி மார்ட்டன் கம்பெனியார் ஒரு ரூபாய்க்கு விற்பதை நாம் அரை ரூபாய்க்கு விற்றுல் நமக்கு லாபம் கிடைக்காதா? மரங்களில் ஒருநாள் ஒன்றுக்கு 2 முதல் 4 அவுன்ஸ் நிறை வரையில் பிசின் வடியும். இப்படி இரண்டு மாஸங்களுக்குத்தான் வடியும். இதற்கு செலவோ ஒன்றுமில்லை. இதைத் தவிர்த்து, பட்டையும் உதவுகிறது. இது தோல் பதனிட உபயோகப்படும். பளபளப்புள்ள சிவந்த வர்ணமேருகிறது. இதைத் தவிர்த்து பட்டையை ஜலத்தில் கொதிக்கவைத்துப்புண்களைக் கழுவினுல் சீக்கிரத்தில் அவைகள் ஆறும். நல்லெண்ணெயுடன் பட்டையை நன்றுகப் பொடியாக்கி தூளாகச்சேர்த்துத்தடவ பிளவை முதலியவை சொஸ்தமாகுமாம். மரம் உரல் குந்தாணி, உலக்கை முதலியவைகளுக்கும் உபயோகப்படுவதுடன் விறகுக்கும் உபயோகப்படுகிறது. இப்படி பலவிதமாகவும் உபயோகப்படும் கருவையை நாம் விருத்தி செய்கிறேமா? இல்லவேயில்லை. நான் சிறுவயதில் பார்த்ததில் நாலில் ஒரு பங்கு கூட காணுவதில்லை. இதை சுலபமாக விருத்தி செய்யலாம். முதல் வேண்டுவதில்லை. பங்குனி, சித்திரை மாஸங்களில் மரத்தடியில் விழுந்து கிடக்கும் விதைகளைப் பொறுக்கி ஆவணி புரட்டாசி மாஸங்களில் மழை பெய்து பூமி ஈரமாய் இருக்கும் போது போட்டு விட்டால் பிறகு ஜலம் விடவேண்டியதில்லை. குறைந்தது 10 அடிக்கு ஒன்றுதான் இருக்கவேண்டும். முளைத்த பிறகு ஆடுகள் கடிக்காமலும், வேலை ஆட்கள் முள் குத்துமே என்று வெட்டிவிடாமலும் மாத்திரம் கவனிக்கவேண்டும். இரண்டு வருஷத்தில் அரை அடிச் சுற்றுக்கு மேல் ஆகிறது. இதை முள் இல்லாமலும் உண்டாக்கலாம். விதைகளைப் பொறுக்கி சாணிப்பாலில் இரண்டு நாளைக்கு ஊற வைத்து விட்டு பிறகு ஊன்றிவிட்டால் முள் இராது.

எஸ். ஸோமஸுந்தர தேசிகர்.

## INDIVIDUAL MANURING OF SINGLY PLANTED PADDY.

BY

C. NARAYANA AIYAR,

*Agricultural Inspector.*

## ஒற்றை அலகாக நடவும் நாற்றுக்குத் தனிமுதல் எருவும்.

நெல் சாகுபடியில் சிரத்தையுள்ளவர்கள் சென்ற சுமார் 5, 6 வருஷமாக நாற்றங்காலில் விதையைக் குறைத்துப் பரவி, அப்படி சிறுக விதைவிடப்பட்ட நாற்றங்காலிலிருந்து கிடைக்கும் நாற்றை ஒவ்வொரு அலகாக (தனி முதலாக) நடுவதினால், விதை லாபமட்டுமல்லாமல், நல்ல கண்டுமுதலையும் அடையலாமென்று செவ்வையாய்க் கண்டு கொண்டிருக்கிறார்கள். ஒற்றை அலகுநடவை புதிதாய் எத்தனித்தவர்கள் முதல் ஒன்று அல்லது இரண்டு வருஷத்தில் கொஞ்ச விஸ்தீர்ணத்தில் பரீக்ஷார்த்தமாக நட்டபோதிலும், வரவர தங்களுடைய முழு விஸ்தீர்ணத்திலும் ஒற்றை அலகாகவே நடப் பிரயாசப்பட்டுவருகிறார்கள். அவ்விதமாய் சாகுபடி செய்து வருகிறவர்களை விசாரித்தால் உண்மையாகவே தங்களுடைய முழுநிலத்திலும் ஒற்றை அலகு நடுவதில் ஸாதாரணமாய்ப் பிடிப்பிடியாக நடுவதினால் ஏற்படும் செலவைக்காட்டிலும் ஜாஸ்தியாவதில்லை என்றும் சொல்லுகிறார்கள். ஆனால், அப்படி நட்டு அநுபவமில்லாதவர்களோ, ஒற்றை அலகு நடுவதற்கு நாற்றங்காலுக்கும், வயலுக்கும் ஏராளமான உரம் முதலிய செய்நேர்த்திகள் செய்யவேண்டுமென்றும், ஜாஸ்தி கூலி பிடிக்குமென்றும், இன்னும் பலவிதமான ஆக்ஷேபங்களும் சொல்லுவார்கள்.

ஒற்றை அலகே அப்பியாஸமாகக் கையாடி வருபவர்களுக்கு ஷை அபிவிருத்தி மார்க்கத்தினால் உண்டாகும் கண்டு முதலைக் காட்டிலும் ஜாஸ்தியான கண்டு முதலைக் கொடுக்கக்கூடிய கஜ நடவு தனிமுதல் எருவிடுதல் என்னும் அபிவிருத்தியைப்பற்றி கீழே சொல்லப்பட்ட குறிப்புகள் உபயோக முள்ளனவா யிருக்கும். மேலே சொல்லப்பட்ட நடவு, சென்ற வருஷத்தில், கும்பகோணம் தாலூகா, பாபநாசம் ஸ்டேஷனுக்குத் தெற்கே ஸுமார் 4 மைல் தூரமுள்ள, திருக்கருகாவூரில் (திருக்களாவூர்) மகா-ா-ா-ஸ்ரீ டி. எஸ். நாராயணஸாமி அய்யர் அவர்களால் பரீக்ஷார்த்தமாக நடப்பட்டது.

பரீக்ஷார்த்தமாக நடப்பட்ட விஸ்தீர்ணம் 41 ஸெண்டு நிலம். நடப்பட்ட ஸ்தலம் குருவை விதை விடப்பட்டு நாற்றங்கால் ஆனதாலும், ஷை பரீக்ஷை செய்ய யோஜனை அவருக்குப் பிற்பாடு தோன்றினபடியாலும், ஷை நடவுக்காக தனியாக நாற்றுத் தயாரிக்கப் படவுமில்லை, ஷை வயலுக்கு விசேஷித்த வேலைகளும் செய்யப்படவில்லை. நடப்பட்ட வயல் முன்னால் மண்வெட்டியால் கொத்தப்பட்டு மூன்று சால் உழப்பட்டிருந்தது. ஸாதாரணமாக நெருக்கமாக விதை விடப்பட்ட பெரும் சம்பா (செம்பாளை) நாற்றிலிருந்து பட்டை உரப்புள்ளதாக பொறுக்கி நாற்பதாம் நாள் பறிக்கப்பட்டு, அற்பசி மாஸ மத்தியில் நடவு நடப்பட்டது. நடவு, சாலை சாலையாக எக்கண்டமும் $2\frac{1}{2}$ அடி இடைவெளி கொடுத்து ஒரே அலகு நடப்பட்டது. நடுவதற்குமுன் ஒவ்வொரு முதல் நடக்கூடிய இடத்தில் ஒரு சிராங்கை மணலுடன் ஒரு சிராங்கை தொழு (சாணி) எருவும் போட்டு கையால் குழப்பப்பட்டு, ஒரே நாற்று நடப்பட்டது. இப்படி எருவிட 12 வண்டி தொழு எருவும், 24 வண்டி மணலும் செல்லும். களை எடுக்கும்

தருணத்தில் இடைவெளி மண் வெட்டியால் கொத்தப்பட்டது. அந்த ஸமயத்தில் ஒரு ஏகருக்கு ஒரு பாரம் வீதம் ஷை 41 ஸெண்டுக்கு உள்ள 8 மணங்கு கடலைக் கொட்டைப் பிண்ணுக்கை 2 வண்டி சாம்பலுடன் கலந்து, அதை 2 தடவையாகப் பிரித்து, 20 நாளைக்கொருதரம் அதை முதலின் பேரில் வீதம் செய்து ஒவ்வொரு முதலைச் சுற்றியும் கையால் பறித்துக்கொண்டு எருவைக்கப்பட்டது. அறுவடையாகும் வரையில் ஒரு அங்குலம் ஜலம் பாய்ச்சப்பட்டது. முதல் ஒன்றுக்கு 60 கிளைக்குக் குறையாமல் 100 அலகு வரையிலும் இருந்தது. இதற்கு ஆள் கூலி, எருக்கிரயம் ஜாடாவாக ஏற்பட்ட செலவு ரூபாய் 11-0-0 ஆயிற்று. இதே விஸ்தீர்ணமுள்ளதும், இதே மாதிரி குருவை விதை விட்ட நாற்றங்காலில் ஸாதாரண நடவில் 6 கலம் (144 பட்டணம் படி) நெல்லும், 12 கட்டு வைக்கோலும் காண, இந்த வயலில் 26 கலம் நெல்லும் (ஏகர் ஒன்றுக்கு 1,522 பட்டணம் படி) 36 கட்டு வைக்கோலும் கிடைத்தன.

இந்த வருஷத்திலும் மகா-ா-ா-ஸ்ரீ நாராயணஸாமி அய்யரவர்கள் மேலே சொல்லிய நடவை ஸுமார் 4·33 ஏகர் நிலத்தில் நடத்தியிருக்கிறார்கள். அதில் 3·33 ஏகர் பெரும் சம்பா என்ற செம்பாளை நெல்வகையையும், மீதி ஒரு ஏகர் நிலத்தில் மத்திய மாகாணத்திலிருந்து இந்த ராஜதானிக்குப் புதிதாய் சில வருஷங்களுக்குமுன் கொண்டுவரப்பட்ட பாங்கு நெல்லையும் பரீக்ஷார்த்தமாய் நட்டிருக்கிறார்.

பெரும் சம்பா.—நாற்றங்காலில் ஸெண்டு ஒன்றுக்கு ¾ பட்டணம் படி வீதம் ஆடி மாஸ முதலில் விதை விடப்பட்டு, ஆவணி மாஸம் 15 தேதியில் நடவு செய்யப்பட்டிருக்கிறது. வரிசைகள் சென்ற வருஷத்தைப் போலவே 2½ அடி தூரத்திலிருக்கின்றன. ஆனால் வரிசையில் முதல்கள் ஒரு அடி தூரத்தில் நடப்பட்டிருக்கின்றன. ஸுமார் 1 பட்டணம் படி விதையைக்கொண்டு 2-2½ ஏகர் நிலம் நடவாகியிருக்கிறது. நடவாகி இப்போது (1910-ம் வருஷம் அக்டோபர் மீ ஸம் 10-ம் தேதி) ஒரே மாஸமாகியிருந்தும், ஒரு முதலுக்கு 50 கிளைக்குக் குறையாமலும், ஸராஸரியில் 60-65 கிளைக்குக் குறையாமலும் இருக்கின்றன. நடுவதற்குமுன், சென்ற வருஷத்தைப் போலவே, எருவைக்கப்பட்டதைத் தவிர, வேறு எரு இன்னும் வைக்கப்படவில்லை இடைவெளி ஒரு தடவை, நடவான 25-ம் நாள் மண்வெட்டியால் கொத்தப்பட்டு இப்போது முதல்களுக்கு எருவிடத் தயாராயிருக்கிறது

பாங்கு நெல்.—4½ மாஸ வயதுள்ள இந்த நெல் தினுசானது வைகாசி மாஸம் முதலில் நாற்றங்காலில் விதை விடப்பட்டு ஆனி மாஸம் முதலில் நடவாகி யிருக்கிறது. வரிசைக்கு வரிசை 2 அடியும், வரிசையில் 1 அடியும் வைத்து ஒரே முதல் நடப்பட்டிருக்கிறது. நட்ட 1½ மாஸத்தில் இடவெளி கொத்தப்பட்டு ஏகர் ஒன்றுக்கு 5 மணங்கு கடலைக் கொட்டைப் பிண்ணுக்கும், 2 வண்டி சாணி எருவும் முதலின் பேரில் வீதம் செய்துவைக்கப்பட்டது. இப்போது பயிர் கதிராகி இன்னும் ஒருவாரம் அல்லது 10 நாளில் அறுவடையாகும் ஸ்திதியிலிருக்கிறது. ஒரு முதலில் 30 கிளைக்குக் குறையாமலும், ஸராஸரிக்கு 35 முதல் 50 கிளை வரையிலும் இருக்கின்றன.

மேலே சொல்லப்பட்ட இரண்டு வகைகளும் காலத்தில் நடப்பட்டு இப்போது பயிர் இருக்கும் ஸ்திதியைக் கவனிக்கும்போது சென்ற வருஷத்தில் கிடைத்த கண்டுமுதலைக் காட்டிலும் இரட்டிப்புக்கண்டுமுதல் கிடைக்குமென்று தோன்றுகிறது. ஷை சாகுபடியையும், இன்னும் ஒற்றை அலகில் பத்தி நடவு என்ற சாலை நடவையும் பார்வையிட இது நல்ல ஸமயமாகையால், இந்த நூதன முறையை தஞ்சாவூர் ஜில்லாவிலுள்ள மிராசுதாரர்கள் திருக்கருகாவூருக்குப்போய் நேரில் பார்த்து தங்களுடைய பண்ணைகளில் கொஞ்ச விஸ்தீரணத்திலாவது அடுத்த வருஷத்தில் நட்டு பெருத்தலாபத்தை அடையவேண்டுமென்ற நோக்கத்துடன் இது எழுதப்பட்டது.

சி. நாராயணய்யர்.

## TEACHING CHILDREN.

BY
V. KUPPUSAMI AIYAR.

## குழந்தைகளுக்கு போதித்தல்.

ஸ்வாமியினால் சிருஷ்டிக்கப்பட்ட இந்த உலகத்தில் ஒவ்வொன்றும் அதனதன் வளர்ச்சியில் வித்தியாஸப்பட்டிருந்தபோதிலும் சில இயற்கை விதிகளை ஒத்தே விருத்தி அடைகின்றன. இதன் உண்மையை எந்த சாஸ்திரத்திலும் காண்கிறோம். மனிதனுடைய தேக அமைப்பையும், இதர சில மிருகங்களினுடைய அமைப்பையும் ஒத்திட்டுப் பார்க்கும்போது சில சிறு விஷயங்களில் வித்தியாஸமிருந்தாலும் பெரும்பான்மையாய் ஒற்றுமை இல்லாமலிருக்கிறதா? மனிதனும் மூச்சுவிடுகிறான், மரமும் மூச்சு விடுகிறது. மனிதனும் சாப்பிடுகிறான், மரமும் உணவை உட்கொள்ளுகிறது. இவைகளைப் பற்றி யோசிக்கும்போது உலகத்தில் வஸ்துக்கள் வேறுபட்டிருந்தபோதிலும் அவைகளில் பொதுவான சில அம்சங்களைக் காண்கிறோம். வேறுபட்டிருக்கிற வஸ்துக்களிலே ஒற்றுமை இருக்கும்போது ஒரேவிதமான வஸ்துக்களின் கூட்டத்தில் எவ்வளவு அதிகமாக ஒற்றுமை இருக்கவேண்டும்?

முன்னாளில் படிப்புக்காக சில வித்வான்களிடத்தில் சிறுவர்கள் நான்கு அல்லது ஐந்து பேர் விடப்பட்டிருந்தார்கள். அந்தக் காலத்தில் அவர்கள் வித்வான்களாக இருந்தபடியாலும், அவர்களிடத்தில் விடப்பட்ட சிறுவர்களின் தொகை கொஞ்சமாக இருந்ததினாலும், ஒவ்வொரு சிறுவருடைய போக்கை அறிவது கஷ்டமாக இல்லாதபடியினால் அவர்கள் தங்களிடத்தில் ஒப்புவிக்கப்பட்ட சிறுவர்களுக்கு அவரவர்களுக்குத் தகுந்தபடி கல்வியை ஊட்டி, யோக்கியதையை உண்டாக்கினார்கள். தற்காலத்திலோ ஒரு உபாத்தியாயரிடத்தில் சில வேளைகளில் 50 அல்லது 60 பிள்ளைகள் விடப்படுகிறார்கள். இவர்கள் எல்லாருடைய போக்கையும் அறிந்து அவரவர்களுக்குத் தகுந்தபடி, அதாவது எந்த சாஸ்திரத்தில் அவர்களுக்கு உற்சாகம் இருக்கிறதோ அந்த சாஸ்திரத்தைப் போதிப்பது எவ்வளவு கடினம்? தவிர சாஸ்திரங்களோ நாளுக்கு நாள் அதிகரித்து மேல் மேலும் அதிக பாகங்களாகப் பிரிக்கப்பட்டும் வருகின்றன. இதையெல்லாம் உத்தேசித்துத் தற்காலத்தில் ஒவ்வொரு உபாத்தியாயரும் தன்னிடத்தில் ஒப்புவிக்கப்பட்ட சிறுவர்களுக்கு அவரவர்களுக்குத் தகுந்த போதனை புகட்டத் தன்னாலியன்றவரையில் முயலுவது கடமையேயாகும். இது எப்படி முடியும்? எந்த வழியை அனுஸரித்தால் சுலப சாத்தியமாகும்? என்கிறதைப்பற்றி ஒவ்வொரு உபாத்தியாயரும் யோசனை செய்யவேண்டியது. இதற்கு ஸுலபமான மார்க்கம் எது வென்றால் குழந்தைகளுடைய வளர்ச்சிக்குரிய இயற்கை விதிகளை அனுஸரித்து நடப்பதே. இயற்கை விதிகளுக்கு விரோதமாக எதுவும் செய்ய முடியாது. குழந்தைகள் எப்படி வளருகின்றன? எதை இச்சிக்கின்றன? எப்படி அவைகளுக்குச் சந்தோஷமான வழிகளில் போதனை செய்யலாம்? என்று நாம் கட்டாயம் பார்க்க வேண்டும்.

ஒரு குழந்தை பிறக்கிறது. பூமியில் பிறக்கும்போது கத்திக்கொண்டே விழுகிறது. கொஞ்ச நாளைக்கெல்லாம் கை கால்கள் முளைத்து தவழ்ந்து விளையாடுகிறது. இவைகளெல்லாம் அவ்வளவாக நம்முடைய கவனத்தைக் கவராமல் போய்விடுகின்றன. ஆனாலும்

இவைகள்தான் குழந்தையினுடைய விருத்தியை நமக்குக் காட்டுகின்றன. குழந்தை ஸாதாரண வஸ்துக்களைக் கண்டு ஆச்சரியப்பட்டு நிற்கிறது. எதையும் தொட்டுத் தொட்டுப் பார்க்கிறது. எதிரில் விளக்கை வைத்திருந்தாலும் விளக்கு சுடும் என்று தெரியாமையினால் அதைத் தொட ஓடுகிறது. கையில் எது அகப்பட்டாலும் அதை உடைக்க முயலுகிறது. விளையாட்டிலோ மிக ஆவல் கொள்ளுகிறது. தன்னைப்போலச் சிறு குழந்தைகளைக் கண்டு விட்டால் கொண்டாட்டம்தான். பெரியவர்கள் எந்த விதமாக நடந்துகொள்ளுகிறார்களோ, அந்த விதமாகத் தானும் தன்னுடைய விளையாட்டில் நடிக்க ஆரம்பிக்கிறது. தொட்டிலில் கட்டித் தொங்கவிட்டிருக்கும் பஞ்சவர்ணக் கிளிகளைப் பார்க்கப் பார்க்க உற்சாகம் கொள்ளுகிறது. கையில் ஒரு கரித்துண்டு அகப்பட்டு விட்டால் சுவரெல்லாம் நாசந்தான். என்ன அழுதாலும் தாயின் தாலாட்டுக் குரலைக் கேட்டுத் தூங்கிவிடுகிறது. தெருவில் மேளம் வந்துவிட்டால் ஸங்கீத வித்வான்போல் தலையை அசைத்துத் தாளம் போட்டு ஆனந்தப் படுகிறது. நாய் பக்கத்திலில்லாமல் சாப்பிடுவதில்லை. இன்னும் எவ்வளவோ சேஷ்டைகளைப் பார்க்கிறோம். அவைகளெல்லாவற்றையும் எழுதுவதென்றால் இடம் போதாது. உபாத்தியாயர்கள் இவைகளை யெல்லாம் கவனித்துக்காரணங்களை உணர்ந்து, அதற்கேற்ற போதனையை ஆரம்பித்தால் பிள்ளைகளுக்குக் கல்வியில் எவ்வளவு ஆனந்தம் உண்டாகும்?

மேற்கண்ட குறிகளுக்கெல்லாம் காரணங்கள் ஸாதாரணமாகப் பின் வருபவைகளென்றே சொல்லலாம் :—

(1) குழந்தைகளுக்கு சுறுசுறுப்பில் பிரியம். ஒரு குழந்தையாவது ஒரு நிமிஷம் கூட சும்மா இராது. ஏதாவது செய்துகொண்டுதான் இருக்கும்.

(2) அழகான வஸ்துக்களைப்பார்க்க உற்சாகம். ஸாதாரணமான சிவப்புக் காகிதத்தைக் கண்டதும் என்ன ஆனந்தப்படுகிறது.

(3) உண்மையை அறிந்து கொள்வதில் ஊக்கம். கையில் ஒரு சுண்ணுடிப் பதுமை அகப்பட்டால் அதற்குள் என்ன இருக்கிறது என்பதைப்பார்க்க ஆவல்கொண்டு உடனே அதை உடைக்கிறது,

(4) பாட்டில் பிரியம்.

(5) அதன் விசுவாசம்.

இவைகள் நற்குணங்களின் முளைகளல்லவா? கல்வியின் பயனென்ன? மேற்சொன்ன முளைகளைப்பாதுகாத்து விருத்திசெய்து அந்தக் குணங்களுக்குத் தகுந்த நடத்தையை உண்டுபண்ணுவதே கல்வியின் நோக்கம். இவ்வாறிருக்க, ஏற்கனவே குழந்தைகளிடத்தில் இருக்கிற சிறிய விதைகளைத் தண்ணீர் வார்த்து வளரவிட்டு, கெட்டகுணங்களாகிய களைகளைப் பிடுங்கி, நன்னடக்கையாகிய பூவும், காயும், பழமும் கொடுக்கச் செய்வது நலமா? அல்லது இருக்கிற விதைகளை மக்கச்செய்து, வேறுவிதைகளை நட்டு, வேறுவிதத்தால் பயிரிட்டு மாசூல் அறுப்பது நலமா? எது சுலபம்? எது சாத்தியம்?

மான்ஷர் செயிலி என்பவர் இந்தியாவைப் பற்றி எழுதுகிறார்: "பள்ளிக்கூடங்களில் கற்றுக்கொள்ளுகிற பிள்ளைகளைவிட, பள்ளிக்கூடங்களுக்கு வெளியேயுள்ள பிள்ளைகள் புத்திசாலிகளாக இருக்கிறார்கள், ஏன்? பள்ளிக்கூடத்தில் புகட்டப்படுவதெல்லாம் புதிதாக இருக்கின்றன. முன்னால் அதைப்பற்றி அவர்களுக்குக் கொஞ்சம் கூடத்தெரியாது. ஒரு சிறிய கிராமப்பையனுக்கு அவன் பார்க்கிற ஒவ்வொரு செடியையும் பற்றித்தெரியும். அவன் வீட்டிலுள்ள ஒவ்வொரு பாத்திரத்தின் உபயோகமும் அவனுக்குத் தெரியும். ஆகாயத்தைப் பார்த்து மழை சீக்கிரத்தில் உண்டா, இல்லையா என்று சொல்லத்தெரியும். சக்கரம் சரியாக சுழல அடிக்கடி மைபோட வேண்டும் என்றும் தெரியும். இப்படி தினப்படி ஸாதாரணமாய்ப் பார்க்கிற அனேக விஷயங்களைச் சிறுவர்கள் பள்ளிக்கூடங்களில் கற்றுக்கொள்ளுகிறதில்லை." இதன் உண்மை எல்லாருக்கும் தெரியவரும். பி. ஏ. பரிக்ஷையில் முதலாகத்தேறின எத்தனைபேருக்கு

நெற்பயிருக்கும், இதரப்பயிருக்கும் வித்தியாஸம் தெரியாமலிருக்கிறது? மின் சாரத்தைப் பற்றி ஒரு நாள்முழுவதும் பேசக்கூடிய ஒரு பி. ஏ. க்கு நெல் எப்படி விளைகிறது என்று தெரியாமலிருந்தால் இவருடைய படிப்பு,, படிப்பு என்று சொல்லத்தகுமா? இவர் குழந்தையாயிருக்கும்போது முதல் தன் உபாத்தியாயரை மின்சாரத்தைப்பற்றிக் கேட்டுவந்தாரா? இவைகளுக்கெல்லாம் என்ன காரணம்? குழந்தையாயிருக்கும்போது பக்கத்திலுள்ள வஸ்துக்களைப்பற்றி அறிய வேண்டிய ஆசை இராமல் இராது. குழந்தைகள் வஸ்துக்களை அறியும் ஆசையின் பொருட்டு ஏதாவது புத்திசாலித்தனமான கேள்விகள் கேட்கும்போது "சீ, உனக்கு அது வேண்டியதில்லை. நான் சொல்லுவதை மாத்திரம் கேட்டுக்கொள். இதைப் படித்தால் போதும்," என்று சொல்லி பிள்ளைகளை வாயெடுக்கவொட்டாமல் அடக்கும் உபாத்தியாயர்கள் எத்தனை பேரைப் பார்த்திருக்கிறோம். இது அல்லவா காரணம்? பிள்ளைகளுக்கு அவர்கள் காண்கிற வஸ்துக்களைப் பற்றி எல்லா விஷயங்களையும் விவரமாய் ஆசையோடு போதிப்பதும், அவரவர்களுக்கு எவ்வெவற்றில் ஆசையுண்டாயிருக்கிறதோ அவ்வவற்றில் பின்னும் கொஞ்சம் உற்சாகத்துடன் கற்பிப்பதும், சிருஷ்டியின் விநோதங்களை அவரவர்களுக்குக் காண்பித்து ஒவ்வொன்றிலும் ஆசையுண்டாக்குவதும், தன் குருட்டுவழியில் அவர்களைக்கொண்டு வராமல் குழந்தைகள் குணங்களின் ஸ்வபாவங்களை ஒட்டி நடந்து வந்தால் மேலேசொன்னபடி மான்ஷர் செயலி எழுதுவதற்கு இடமிருக்குமா? ஆதலால் உபாத்தியாயர் கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட இந்த உலகத்தின் அதிசயங்களைப் பிள்ளைகளுக்கு எடுத்துக் காட்டி, எல்லாப் பிள்ளைகளுக்கும் பொதுவான இயற்கை ஸ்வபாவங்களை அனுஸரித்து உபயோகமுள்ள வழியில் போதனை செய்தால் கூடிய சீக்கிரத்தில் நம் சிறுவர்கள் எல்லாவற்றிலும் தங்களுக்கு இயற்கையில் உள்ள ஆவேசத்துடன் வயது சென்றகாலத்திலும் உழைத்து தேசத்தை முன்னுக்குக் கொண்டு வருவார்கள்.

வி. குப்புஸாமி அய்யர்.

## SHAH JEHAN.
## ஷாஜிஹான்.

ஷாஜிஹான் என்பவர் பதினேழாம் நூற்றுண்டின் முற்பகுதியில் இந்தியாவை அரசாட்சி செய்த ஒரு மொகலாய சக்ரவர்த்தி. இவர் "டாஜ்மஹால்" என்னும் ஒரு சிறந்த கட்டிடத்தைக் கட்டினவர் என்பதைத்தான் அநேகர் அறிந்திருப்பார்கள். ஆனல், அவருடைய ஜீவியசரித்திரத்தையும், குணதிசயங்களையும் ஊன்றிப்படித்தால், அவருடைய காலத்தில் பிரஜைகள் அவரை அன்புடன் கொண்டாடியதற்கும், பிற்காலத்தார் அவரைச் சிலாகிப்பதற்கும், காரணமான சிறந்த பல குணங்கள் ஷாஜிஹானிடமிருந்தன என்பது தெளிவாகும். இந்திய சரித்திர நூலாசிரியர்களும், ஐரோப்பிய சரித்திர நூலாசிரியர்களும், ஷாஜிஹானைப்பற்றி வேறு விஷயங்களில் அபிப்பிராய பேதங் கொண்டவர்களாயிருந்தாலும், அவர் நடுவுநிலைமையோடும் நீதியோடும் கூடியவர் என்பதைமட்டும் எல்லாரும் ஒரேமனதுடன் அங்கீகரிக்கிறார்கள். மனிதர்களுடைய இயல்பையும், அந்தஸ்தையும் கவனியாமல், எல்லாருக்கும் ஒரேவிதமான நீதியைச் செலுத்துவதில் ஷாஜிஹான் மிகவும் கவனம் செலுத்தும் இயல்புடையவர். இதனல் அவருடைய கீழ் உத்தியோகஸ்தர்கள் மிகுந்த ஜாக்கிரதையுடன் நீதி செலுத்துவதில் கவலைகொண்டவர்களாகவே இருப்பார்கள். ஏனெனில் நீதி தவறி ஒருகாரியத்தைச் செய்துவிட்டால் தங்களுடைய வேலையும் போய், சக்ரவர்த்தியின் கோபத்துக்கும் பாத்திரமாக வேண்டும் என்பதை அவர்கள் நன்றாய் உணர்ந்தவர்கள். இதனல் ஷாஜிஹானுடைய ராஜ்யம் பெரிதாயிருந்தாலும், வாரத்தில் இருபது வியாஜ்யங்களுக்குமேல்

அவரிடத்தில் விசாரணைக்கு வருவதில்லை. அதுவும்மதசம்பந்தமானதும், வெட்டு,கொலை முதலியவை சம்பந்தமானது மாகவே பெரும் பாலுமிருக்கும். அப்படிப்பட்ட வியாஜ்யங்களை உள்நுழைந்துபார்த்து சாமர்த்தியமாகவே ஷாஜிஹான் முடிவு செய்வார். லஞ்சம், சிபார்சு, முதலியவைகளை ஏற்றுக்கொள்ளும் ஜட்ஜிகளிடம் ஷாஜிஹானுக்கு அருவருப்பு அதிகம். டெல்லி நகரத்துக் கொத்தவால் ஒரு ஸமயத்தில் ஒரு வியாபாரியிடமிருந்து லஞ்சம் வாங்கி விட்டானும். இந்த ஸங்கதியை அறிந்த ஷாஜிஹான் ஒரு உத்தியோகஸ்தன் மூலமாய் நல்லபாம்பை உயிருடன் அனுப்பி அந்தக்கொத்தவாலைக் கடிக்கும் படிச்செய்வித்தாராம். பாம்புகடித்து அந்தக் கொத்தவால் சிறிது நேரத்துக்குள் இறந்துபோனானும்.

ஷாஜிஹான் அவருடைய காலத்தில் கொள்ளைக் காரர்களை வேரோடு அழித்தார். இவருடைய காலத்துக்கு முன்பு கொள்ளையும், வழிப்பறியும் ஸர்வ ஸாதாரணமாயிருந்தன. இவர் அந்தந்த ஜில்லாக்களில் நடக்கும் கொள்ளை, வழிப்பறி முதலியவைகளுக்கு, அந்தந்த ஜில்லாவிலிருக்கும் உத்தியோகஸ்தர்களே உத்தரவாதிகளாக வேண்டுமென்று கட்டளையிட்டார். இதனால் கீழ் உத்தியோகஸ்தர்கள் அவைகள் நடவாதிருக்கும்படியான முயற்சியைச் செய்தார்கள். ஸூரத்து நகரத்தில் வந்திருந்து வியாபாரம் செய்த உலாந்தக்காரர்களுடைய பொருள்கள் ஒரு இரவில் கொள்ளை போய் விடவே, ஸூரத்து கவர்னர் அந்த வியாபாரிகளுக்கு ஏற்பட்ட நஷ்டத்தைக் கட்டிக் கொடுக்க வேண்டுமென்று ஷாஜிஹான் அவரைக்கட்டாயப்படுத்திக் கொடுக்கும்படிச்செய்தார். போர்த்துகல் தேசத்துக் கொள்ளைக் காரர்கள் வெகு காலமாக வங்காள நாட்டைக் கொள்ளையடித்தும், ஜனங்களை ஹிம்ஸித்தும் வந்தார்கள். ஷாஜிஹான் அவர்களுக்குக் கொடுத்த கடுந் தண்டனையால் கடைசியில் அவர்கள் வங்காளத்தை விட்டு ஓடிப்போனார்கள். டேவிட் ஸின்க்லேர், டெயிலர் போன்ற பாரபட்சமுள்ள சில சரித்திர நூலாசிரியர்கள், ஷாஜிஹானுடைய மதப்பற்றும், அவருக்குக் கிறிஸ்தவ மதத்திலிருந்த ஒரு விதவெறுப்பும், அவர் தமது தகப்பனுருக்கு விரோதமாய்க்கலகம்செய்தபோது, போர்த்துகல் தேசத்தார் தமக்கு உதவி புரிய மறுத்ததால் ஏற்பட்ட கோபமுமே, அவர்களை அடித்துத் துரத்தும்படி சக்ரவர்த்தியைச் செய்தன என்று சொல்லுகிறார்கள். ஆனால் பாரபட்சமில்லாத யெல்பின்ஸ்டன், கீன், பெர்னியர், போன்ற சரித்திர நூலாசிரியர்களின் கருத்து வேறுவிதமானது.

“ஷாஜிஹானுடைய நோக்கம் மத சம்பந்தமானதும், தன்னைப்பற்றியதுமான நோக்கமல்ல; ராஜீய சம்பந்தமான நோக்கமாகும். குடிகளைப் பாதுகாத்து ரக்ஷிக்கவேண்டியது அவருடைய கடமையாதலால், வருஷக் கணக்காய் ஜனங்களை ஹிம்ஸித்து வந்த பெருந்தன்மையில்லாத ஐரோப்பியர்களை அடக்க முயற்சித்தது முற்றும் நியாயமேயாகும்” என்று இவர்கள் அபிப்பிராயப்பட்டு எழுதியிருக்கிறார்கள்.

ஷாஜிஹான் வீண் பெருமையையும், உயர்வையும் பாராட்டும் இயல்புடையவரல்லர். இவருடைய பெருந்தன்மையைக் குறித்து இங்கே ஒன்று சொல்லுவோம். அந்தக் காலத்தில் ராஜாக்களுக்கு குடிகள் கீழே விழுந்து நமஸ்கரிப்பது வழக்கம். இப்படி ஜனங்கள் செய்வது ஷாஜிஹானுக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. பட்டத்துக்கு வந்த உடனே அவர் அந்த வழக்கத்தை நீக்கிவிட்டுத் தரையைத்

தொட்டு முத்தமிட்டுக் கொண்டால் போதுமானதென்று ஆக்யாபித்தார். அந்த வழக்கமும் நல்லதல்ல வென்று அவருக்குப்பட்டது. உடனே அதையும் தள்ளிவிட்டு மரியாதைக் குறிப்பாக, மூன்று தடவை ஸலாம் செய்தால் போதுமானதென்று ஏற்படுத்தினர். இந்த வழக்கத்தைக்குடிகள் அனுஸரித்தால் போதுமானதென்று ஸர்க்குலரும் வெளிப்படுத்தினர். இந்தச் செய்கை ஷாஜிஹானுடைய பெருந்தன்மையைக் காட்டுகிறதல்லவா?

துணிகரமான வீரச் செயல்களைச் செய்வதில் ஷாஜிஹானுக்குப் பிரியம் அதிகம். புலி வேட்டை, யானைச் சண்டை முதலியவைகளை அவர் தானே செய்வதுண்டு. அவர் தம்முடைய குமாரர்களையும் இப்படிப்பட்ட வீரச் செய்கைகளில் பழக்குவித்தார். இவருடைய குமாரர்களில் ஒருவராகிய அவுரங்கஸிப் என்பவர் இரண்டு யானைகள் சண்டை போட்டுக் கொண்டிருந்தபோது மத்தியில் பிரவேசித்து, அந்தச் சண்டையை விலக்கி விட்டார். இந்த வீரச் செயலுக்கு ஷாஜிஹான் மகிழ்ந்து பதினாயிரம் குதிரைகளுக்குத் தலைவராக அவரை நியமித்து, தக்ஷணபாகத்து கவர்ன்மெண்டையும் அவர் வசம் ஒப்புவித்தார். 1633-ம் வருஷத்தில் அவுரங்கஸிப் தக்ஷணத்துக்குச்சென்றார். ஷாஜிஹான் சரீர சம்பந்தமான பலத்தையும், வீரத்தனத்தையும் நேசித்ததோடு மட்டுமில்லை. பயமின்றி உள்ளதையுள்ளபடி வெளியிடும் வார்த்தைகளைக் கேட்பதில் அதிக ஆசையுடையவர். அப்படி வெளியிடுகிறவர்கள் சத்ருவாயிருந்தாலும் ஸரியே; மித்ருவாயிருந்தாலும் ஸரியே. பட்டாளத்திலுள்ள ஒரு உத்தியோகஸ்தன் இவருக்கு முன்னால் மரியாதை யில்லாமல் உட்கார்ந்திருந்தானாம். இவர் கோபங்கொண்டு அவனை வேலையிலிருந்து நீக்கிவிட்டதோடு, பென்ஷனும் கொடுப்பதில்லை என்று சொல்லிவிட்டார். மறுநாளும் அவன் முன்போலவே வந்து உட்கார்ந்துகொண்டு "சக்ரவர்த்தியே! நான் இப்போது உங்களுடைய சம்பளத்தில் இல்லை. ஆதலால் நான் என்னுடைய சுயேச்சைப்படி நடக்கக்கூடிய சுதந்தரனானேன்" என்று சொன்னானாம். அவனுடைய சுதந்தர உணர்ச்சியை ஷாஜிஹான் ஸிலாகித்து மறுபடியும் அவனை முன்போலவே வேலையில் வைத்துக்கொண்டாராம்.

ஷாஜிஹான் ஏழைகள் படும் துன்பத்தையும், துக்கத்தையும் கண்டு சிறிதும் மனம்பொறுத அவ்வளவு இளகிய நெஞ்சையுடையவர். ஏழைகளுடைய கஷ்டத்தை நீக்கும்படியான சந்தர்ப்பம் நேரிட்டபோதெல்லாம் சுயலாபத்தைக் கருதாமல் உதவிசெய்து கொண்டே வந்திருக்கிறார். தக்ஷணத்தில் ஒரு ஸமயம் கொடுமையான பஞ்சம்நேரிட்டு ஜனங்கள் மிகுந்த கஷ்டப்பட்டார்கள். ஷாஜிஹான் இந்த ஸமயத்தில் சும்மா இருக்கவில்லை. தற்காலத்தில் செய்யப்படுவதைப்போல பேருக்குப் பஞ்சநிவர்த்தி நிதி சேர்க்க அவர் முன்வரவில்லை. எங்கெந்த இடங்களில் பஞ்சம் நேரிட்டதோ, அந்தந்த இடங்களில் அன்னசாலைகள் ஸ்தாபித்து, எல்லாருக்கும் இலவசமாய் சாதம்போடும்படி பெர்ஹாம்பூர், அகமதாபாத், ஸூரத் முதலிய இடங்களிலுள்ள உத்தியோகஸ்தர்களுக்கு ஆக்யாபித்தார். பெர்ஹாம்பூரில் ஒவ்வொரு திங்கட்கிழமையும் 5,000 ரூபாய் இந்த தருமத்துக்காகச் செலவு செய்யப்பட்டது. இப்படியாக இருபதுசோமவாரங்களுக்குள் 1,00,000 ரூபாய்க்கு மேல் தருமச்செலவாயிற்று. அகமதாபாத்தில் 50,000 ரூபாய் உண்மையாய்க் கஷ்டப்பட்டவர்களுக்குப் பகுத்துக் கொடுக்கப்பட்டது. சுமார் 70,00,000 ரூபாய் வரியையும் வஜா செய்தார். 1650-ம் வருஷத்தில், மகமதியர்களுக்கு உரித்தான நோன்பு தினங்களில் ஏழைகளுக்கு தர்மம் செய்யும் பொருட்டு தர்ம நிதி ஏற்படுத்தவேண்டுமென்று சிலர் ஷாஜிஹானிடம் சொன்னார்கள். சக்ரவர்த்தி அதற்கு இசைந்து 60,000 ரூபாய் கொடுத்ததோடு ஒவ்வொரு வருஷத்திலும் ரம்ஸான் பண்டிகையின்போது இப்படியே கொடுத்துவர ஏற்பாடுசெய்தார்.

கண்களைக் கவரத்தக்க விதமாய் அரண்மனைகள் கட்டுவதிலும், "தர்பார்" வைப்பதிலும் ஷாஜிஹானுக்கு அதிக ஆசையென்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயம். முதலில் டெல்லி நகரத்தைப் புதுப்பித்து அநேக சித்திரவேலைகளுடன் கூடியதும், அழகானதும், பெரிதானதுமான பதினொரு கோட்டை வாசல்களை அந்த நகருக்கு அமைத்தார்.

ஷாஜிஹான் காலத்தில் இந்தியாவுக்கு வந்திருந்த ஒரு வெனீஸியர் போட்ட பிளான்படி இரண்டு பெரிய தோட்டங்களை ஷாஜிஹான் ஏற்படுத்தினர். திராட்சைத் தோட்டங்கள் விஷயத்தில் மிகுந்த கவனம் செலுத்தினர். தோட்டங்களுக்குத் தண்ணீர் பாய்வதற்காக யமுனை நதியின்போக்கைத் தகுந்த விதமாய்த் திருப்பினதுமன்றி, வேறுபல கால்வாய்களும் வெட்டுவித்தார். அந்தக் கால்வாய்களில் பெரும் பெரும் மீன்களிருந்தன. அவைகளுடைய மூக்கில் துவாரமிட்டு தங்கவளையங்கள் போட்டிருந்தாராம். ஒவ்வொரு வளையங்களிலும் ஒரு சிவப்பும், இரண்டு வைரமும் பதிப்பிக்கப்பட்டிருந்தனவாம்.

ஷாஜிஹானுக்குத் தன் மனைவியிடமிருந்த அளவற்ற காதலே "டாஜ்மஹால்" என்னும் சிறந்த கட்டிடத்தைக் கட்டுவதற்கு முக்கிய ஹேதுவாயிற்று. இந்த மாளிகையை மேனாட்டார் "ஸலவைக்கல்லில் இப்படியும் கட்டமுடியுமோ?" என்று வர்ணித்திருக்கிறார்கள். தன்னுடைய அருமை மனைவியாகிய மம்டாஜ் மஹால் இறந்தபின் ஒரு வாரம் வரையில் ஷாஜிஹான் ஒருவரையும் பார்க்கவில்லை. ராஜ்ய விஷயங்களையும் கவனிக்கவில்லை. நல்ல உடுப்புகள் அணிந்து கொள்ளுவதையும், வாஸனைகள் பூசிக்கொள்ளுவதையும், ஆபரணங்கள்பூட்டிக்கொள்வதையும் அவர் அடியோடு ஒழித்துவிட்டார். பிறந்த நாள்கொண்டாட்டம், முதலிய விசேஷ தினங்களில் வாத்தியங்கள் வாசிப்பதையும், ஸங்கீதங்கள் பாடுவதையும் வேண்டாமென்று நிறுத்திவிட்டார். மனைவி இறந்த துக்கத்தினால் அவருடையமயிர் நரைத்துப்போயிற்று. கண்ணீர் வெள்ளம் போல் பெருகிக்கொண்டேயிருந்தது. "ராஜ்யமும் எனக்கு இன்பத்தைக்கொடுக்க வில்லை, ஜீவியமும் எனக்கு இன்பத்தைத் தரவில்லை, ......எவருடைய முகமும் இனி எனக்குச் சந்தோஷத்தைக் கொடுக்காது" என்று அவர் தாமே வருத்தப்பட்டு சொல்லியிருக்கிறார். ஷாஜிஹானுக்கு வேறு இரண்டு மனைவியர்களிருந்தார்களென்பது வாஸ்தவமே. ஆனால் அவர்கள் ஒப்புக்கு மனைவியர்களாயிருந்தார்களேதவிர, உண்மை ஆசையோடு கலியாணம் செய்துகொள்ளப்பட்டவர்களல்ல.

மம்டாஜ்மஹால் தன்னுடைய காதலனின் முழுமனதையும் வசப்படுத்தி விட்டபடியால் அவருடைய மனதில் வேறு விஷயங்கள் இருப்பதற்கு இடம் சிறிதுமில்லை. எங்கே இருந்தபோதிலும் ஸரியே; எங்கே போனபோதிலும் ஸரியே; ஷாஜிஹான் அவளைத் தன்னுடன் வைத்துக்கொண்டிருப்பாரே, தவிர, அவளைவிட்டுப் பிரிந்து அரை நிமிஷமும் இருக்கமாட்டார். ஆகவே அப்படிப்பட்ட அருமை மனைவி இறந்தபிறகு அவளுடைய ஞாபகார்த்தமாய் அறுநூறு கோடி ரூபாய் செலவுசெய்து அவளுடைய பெயராலேயே "டாஜ்மஹால்" என்னும் உன்னதமாளிகையை ஆக்ரா பட்டணத்தில் ஷாஜிஹான் வெள்ளை ஸலவைக்கல்லுகளால் கட்டினது ஒரு ஆச்சரியமல்ல. "இந்தியாவின் பெருமையும், உலகத்தின் புகழ்ச்சியும்" என்று அந்தக் கட்டிடத்தைப் பலரும் புகழ்வதும் ஒரு ஆச்சரியமல்ல. மொகலாயர்கள் காலத்தில் சித்திரமும், கட்டிடவேலையும் எவ்வளவு உன்னத பதவியிலிருந்தன வென்பதை விளக்க இந்த மாளிகையே போதுமான அத்தாட்சியாயிருக்கிறது.

ஜாதிமதபேதத்தை ஷாஜிஹான் சிறிதும் பாராட்டுவது கிடையாது. எந்த மதஸ்தராயிருந்த போதிலும், எந்த ஜாதியாராயிருந்த போதிலும், எந்த தேசத்தாராயிருந்தபோதிலும், தகுந்த சாமார்த்தியமுடையவர்களாயும், உண்மையுடையவர்களாயு மிருந்தால், அவர்களைக் கௌரவித்து வேலை கொடுத்து வந்தார். இத்தலி தேசத்து சிற்பசாஸ்திரியாகிய விரோனியோ என்பவர் ஒரு அரண்மனை கட்டிக் கொடுத்ததற்காக ஷாஜிஹான் அவருக்கு மூன்றுகோடி ரூபாய் கொடுத்திருக்கிறாரென்றால், வேறென்ன சொல்லவேண்டும்? ஆஸ்டின் போர்டோ என்னும் பிரஞ்சுக்காரரை ஷாஜிஹான் வேலையில் வைத்துக்கொண்டிருந்தார். மசூதிகளையும், அரண்மனைகளையும் உயர்ந்த ரத்தினக்கற்களால் அலங்கரிப்பது தான் இந்தப் பிரஞ்சுக்காரருடைய வேலை. இவருடைய வேலையைக்கண்டு மெச்சினவராய் இவருடைய உருவத்தைப்போலவே தன்னுடைய அரண்மனையில் செய்து அமைக்க ஷாஜிஹான் இடங்கொடுத்திருக்கிறார். இந்த மொகலாய சக்ரவர்த்தியைப் பற்றிய சிறந்த விஷயங்கள் இன்னும் பல இருக்கின்றன.

# SELECTIONS.

## விசேஷத்திரட்டு.

### NATIONAL SERVICE.

### ஜாதீய ஊழியம்.

கன்ஸர்வேடிவ் அல்லது யூனியனிஸ்ட் கட்சியின் தலைவரான லார்டு மிடில்டன் போன மாஸம் எடின்பர்க் பட்டினத்தில், "ஜாதீய ஊழியம்" என்கிற விஷயத்தைப் பற்றி ஒரு சிறந்த பிரசங்கம் செய்தார். எந்த ஜனமானாலும், அது கட்டுப்பாடுள்ளதாயும், தலைவர்களுக்கு அடங்கினதாயும், தேசத்துக்கு ஊழியம் செய்வதில் ஆத்மத்தியாகம் செய்யக் கூடியதாயும் இருக்கவேண்டும். எந்தத் தேசம் அப்படி இல்லையோ, அது தாழ்ந்த நிலைமையை நோக்கிச் செல்லும். இங்கிலாந்து தேசமானது தற்காலம் மேற்கண்ட குணங்களை இழந்து வருவதாய்த் தோற்றுகிறது. கட்டுப்பாடும், அடக்கமும் இல்லாமல் ஒவ்வொருவனும் சொந்த நன்மையைப் பெரிதாகக்கருதி, தேசத்துக்கு ஊழியம் செய்வதைத் தனக்கு ஒரு பிழைப்பாகக் கருதி வருகிறான். தேசத்தை நிர்வகிக்கும் கவர்ன்மெண்டானது, தனக்குத் தானே செய்துகொள்ள வேண்டிய கடமைகளைச்செய்யவேண்டுமென்று நினைத்து, தான் கல்வி பெறுவதும், ஜீவிப்பதும், முதுமைப் பருவத்தில் சுகமாக வசிப்பதும், கவர்ன்மெண்டால் ஆகவேண்டுமென்று கேட்கிறான். தனக்குப் பல வழிகளில் நன்மை செய்யும் சமூகக் காவலன் போல் இருக்கும் கவர்ன்மெண்டுக்குச் சகாயம் செய்வது தனது கடமையென்று உணர்வதில்லை. சமூகம் ஒரு சரீரம் போன்றதென்றும், அதில் ஒவ்வொரு தனி மனிதனும் ஒரு அவயவமென்றும், சமூகத்தின் க்ஷேமத்தைக் காக்க தான் கடமைப்பட்டிருக்கிறானென்றும், அது நல்ல நிலைமையிலிருத்தல் தனது நன்மைக்கு அவசியமென்றும், ஒவ்வொருவனும் அறிந்து அதன்படி நடக்கவேண்டும் இப்படி நடக்கும் ஜனங்கள் ஜெர்மானியரும், ஜப்பானியரும் என்று லார்டு மிடில்டன் உதாரணமாகச் சொன்னார். ஜர்மெனி சுமார் 50 வருஷத்துக்குள்ளாக எவ்வளவோ உயர்ந்த நிலைமையை அடைந்து விட்டது. ராணுவ பலத்தில் அதற்குச் சமமான தேசம் உலகத்தில் இல்லை. கல்வி, தொழில், வியாபாரம், முதலியவைகளிலும் அது மற்றத் தேசங்களை மீறிக்கொண்டு வருகிறது. ஜப்பான் சென்ற 50 வருஷத்துக்குள் செய்திருக்கும் அற்புதமான காரியங்களை உலகம் அறியும். இந்த இரண்டு தேசங்களும் மேற்குறித்த கட்டுப்பாடு, அடக்கம், தன் மறுப்பு, தேச பக்தியாகிய பெருங் குணங்களினாலேயே இந்த உயர்ந்த நிலைமைக்கு வந்திருக்கின்றன.

சில காலத்துக்கு முன்பு இடலி தேசமானது ஆஸ்டிரியா தேசத்துக்கு அடங்கி சிறுமைப்பட்டுவர, அதற்கு சுவாதீனத்தையும், பெருமையையும் சம்பாதித்துக்கொடுத்த தேசாபிமானிகளில், ஜோஸப் மாஜினி என்பவர் ஒருவர். அவர் என்ன சொல்வது வழக்கமென்றால், ஒவ்வொருவனும் தன் ஆயுளில் சில காலத்தைத் தன் தேசத்தின் நன்மைக்காக அர்ப்பணம் செய்ய வேண்டுமென்று சொல்வது வழக்கம். இந்த மகாவாக்கியம் ஒவ்வொரு பள்ளிக்கூடத்திலும் வாயிற்படிக்கு மேல் பொன்னெழுத்துக்களில் எழுதி வைக்கப்பட வேண்டுமென்று லார்டு மிடில்டன் சொன்னார். தேசத்தினால் நாம் எவ்வளவோ நன்மைகளை அநுபவிக்கிறோம். நமது அன்ன, வஸ்திரங்களும், வசிப்பிடமும் நம் தேசத்தினாலேயே கிடைக்கின்றன. நம் முன்னோர்கள் பெரும் காரியங்கள் செய்து கீர்த்திபெற்று மாண்டு போக, அவர்களுடைய அஸ்திசேஷம் நம் தேசத்து மண்ணோடு மண்ணாய்க் கலந்திருக்கின்றது. தேசத்துக் கவர்ன்மெண்டாலேயே நாம் சாவதானமும், அமைதியும் பெற்று வாழ்கிறோம். அன்னியர் புகுந்து நம்மை இம்சிக்காமல் நமது தேசத்தின் காரியஸ்தனாயிருந்து கவர்ன்மெண்டு காக்கின்றது. இப்படியிருக்க, அந்தத் தேசத்துக்கு நமது நன்றியைக் காட்டும் பொருட்டு, நமது ஆயுளில் சில காலத்தை அதன் க்ஷேமத்துக்கும், பெருமைக்கும் அர்ப்பணம் செய்யக் கடமைப்பட்டிருக்கிறோம். இப்படிப் பொருள்படப் பேசிவிட்டு இங்கிலாந்தானது உலகத்து முதல் அந்தஸ்து தேசங்களில் ஒன்றாய் விளங்க வேண்டுமானால், ஜாதீய ஊழியமே ஆதாரமாகக்கொண்டு ஜனங்கள் தங்கள் யோக்கியதையை நிலை நிறுத்த வேண்டுமென்று லார்டு

மிடில்டன் பேசினுர். இத்தகைய கருத்துக்கள் கொண்ட பிரசங்கங்கள் ஜனத்தலைவர்கள் அடிக்கடி செய்து ஜனங்களை உற்சாகப்படுத்துவதால், ஜனங்கள் கேவலம் சுய நலத்தைப் பாராட்டாமல் தேசத்தில் அபிமானத்தை வளர்த்து, அதற்கு ஊழியம் செய்வது சொந்த நன்மையைத் தேடுவதுபோல் தங்கள் கடமை என்று உணருகிருர்கள். இங்கிலாந்திலேயே லார்டு மிடில்டன் போன்றவர்கள் இவ்விதம் ஜனங்களை எச்சரித்தல் அவசியமென்று நினைப்பார்களானுல், இந்தியாவில் இத்தகைய எச்சரிப்பு மிகவும் அவசியமன்ருே ?

"சுதேசமித்திரன்."

---

## AGRICULTURAL EXHIBITIONS.
## விவஸாயக் காக்ஷிகள்.

சென்ற சில வருஷங்களாக தேசாபிமானிகள் விவஸாய விஷயமாய்க் கவனம் எடுத்துக்கொண்டு, சங்கங்களைப் பல காரணங்களால் உண்டாக்கி, பலரிடத்திலும் சந்தா வசூல் செய்திருக்கிருர்கள். கவர்ன்மெண்டாரும், அனேக கலெக்டர்களும், மற்ற ஐரோப்பிய உத்தியோகஸ்தர்களும், சுதேச உத்தியோகஸ்தர்களும், ஜமீன்தாரர்களும், மிராசுதாரர்களும் இவ்விஷயமாய்ப் பணத்தைக் கொடுக்கிருர்கள். குடித்தனக்காரர் ஏழைகளாயும், விவஸாய விருத்தி விஷயங்களை அறியாதவர்களாயும், இருப்பதாலும், குடித்தனத்தாரின் க்ஷேமமே கோரி அவர்கள் விவஸாய விருத்தியை நடிப்பார்களானுல் தேசக்ஷேம பரிபாலனம் பல வழிகளிலும் தனக்குத்தானே உண்டாகுமென்றும், மேற்கண்ட தேசாபிமானிகள் தர்மார்த்தமாய்ப் பணத்தைக் கொடுக்கிருர்கள். இவ்வாறு ஆதரவினுல் உண்டான விவஸாய சங்கங்கள் ஒவ்வொரு ஜில்லாவிலும் அனேகமாய் உயிர்த்திருக்கின்றது. இந்த சங்கங்கள் எவ்விதமாய் வசூல் செய்த பணத்தைச் செலவிடுகின்றனவென்பது சென்னை மத்திய விவஸாய சங்கத்து ரிபோர்ட்டால் வெளிப்படுகின்றது. இச்சங்கங்கள் தேசவிருத்திக்கென்று உண்மையோடு பாடுபடுவது மெச்சத்தகுந்ததே. ஆனுல் அவைகளுக்கு விவஸாயத்தொழில், சாஸ்திர சம்பந்தத்துடன் அனேகமாய்த் தெரியாதாகையால் தீரத்துடன் செய்யும் வேலை இன்னதென்று தெரியாமல் அவைகள் பல விதமாய்த் திகைக்கின்றன.

அப்படி யிருந்தும் கடப்பை, மஞ்சக்குப்பம், திருச்சினுப்பள்ளி, சேலம் ஜில்லாக்களைத் தவிர மற்ற இவ்விராஜதானி ஜில்லாக்கள் விவஸாயக் கால்நடை காக்ஷியில் மிகச் சிரமமெடுத்துக்கொண்டு பல ஆயிரம் ரூபாய்களைச் செலவு செய்து கியாதி பெற்றிருக்கின்றன. இவ்வாறு நடப்பிக்கும் வேலை விஷயமாய் அபிப்பிராயங்கள் வேறுபட்டிருக்கின்றன. நமது கவர்ன்மெண்டார் இக்காக்ஷிகள் நடத்தப்படவேண்டுமென்று உறுதியாய் இருக்கிருர்கள். கால்நடைவிருத்தி இலாகா அதிபதி இக்காக்ஷிகளில் குணமில்லையென்றும், அதற்குச் சார்பாக பூசா கான்பரென்ஸில் நடந்த தீர்மானத்தையும் தெரிவித்திருக்கிருர். இவ்விஷயமாய் சீர்தூக்கிப் பார்க்கையில் பின்வருமாறு யோசனை உண்டாகிறது.

விவஸாயக் காக்ஷிகள் இருப்பதினுல் ஒவ்வொரு ஜில்லாவிலும் பலபெயர் ஓரிடத்தில் கூடிக்கலந்து அனுபவங்களைத் தெரிந்துகொள்ள மார்க்கமுண்டு. பல ஜந்துக்களையும், விளைவு பண்டங்களையும், ஒருமிக்கப் பார்ப்பதில் குணுகுணங்கள் அறிவதற்கு முகாந்திரம் உண்டாகிறது. பரிசு பெற்றவர்களைப்பார்த்து, மற்றவர்கள் அடுத்த வருஷத்தில் மேன்மையான பண்டங்களைக் காக்ஷிக்குக் கொண்டு வருவதற்கு, இது தூண்டுகோலாயிருக்கிறது. பல வஸ்துக்களை விற்கவும், வாங்கவும் இக்காக்ஷி சந்தைகளைப்போல் உதவுகிறது. விவ

ஸாய மேன்மைகளைக் கற்பதற்கு இக்காக்ஷிகள் மாணாக்கர்களுக்கு பெரிய பள்ளிக்கூடமாயிருக்கின்றன. கைத்தொழில் கருவிகள் விவஸாய யந்திரங்கள் முதலியவைகளின் மேன்மையும், முதன்மையும், தெரிவதற்கு இவ்விடம் சிரேஷ்டப்பட்டிருக்கிறது.

இன்னும் பல உபயோகங்களும் இக்காக்ஷிகளால் விளைகின்றன. இக்காக்ஷிகள் ஐரோப்பா, அமெரிக்கா நாடுகளில் இன்றியமையாததாய் இருக்கின்றன. இக்காக்ஷிகளின் முழுப் பயன் அங்கிருக்கும் குடித்தனக்காரருக்கு நன்றாய் விளங்கியிருக்கிறது. அங்கே காக்ஷி நடப்பதற்குமுன் அனேக மாஸங்களுக்கு முன்னதாகவே பிரசுரங்கள் செய்து முயற்சிகள் நடந்தேறுகின்றன. அங்கே காக்ஷிகளில் பரிசு பெற்ற ஜெந்து, வஸ்து இவைகளின் மேன்மைகளைப் பரிசு பட்டங்களில் எழுதி வைப்பார்கள். காக்ஷிகளில் கவனித்துப் பயன்படும் விஷயங்களைச் சில உத்தியோகஸ்தர் உபந்நியாச மூலமாய்த் தெரிவிப்பார்கள். குடித்தனக்காரர் பிரார்த்தனை செலுத்துவது போல் விவஸாயக் காக்ஷிக்குப்போய் நூதன விஷயங்களைக் கற்று தங்கள் கிராமத்தில் அவலம்பிப்பார்கள். அங்கே காக்ஷிகள் பெரிய பள்ளிக்கூடங்கள் போல் உதவுகின்றன. அங்கே காக்ஷிகள் பொருளை உண்டு பண்ணும் முகாந்தரங்களாக உதவுகின்றன. ஆகவே அத்தேசத்தார் விவஸாய காக்ஷிகள் இல்லாமல் தங்கள் தொழிலை நடப்பிக்கமாட்டார்கள். கவர்ன்மெண்டார் உதவியையும், தேசாபிமானிகளின் உதவியையும், முக்கியமானதாக எதிர்பார்க்காமல், தொழிலாளிகளே தங்கள் வருமானத்தில் சொத்து சேர்த்து காரியம் நடப்பிக்க வல்லவர்கள். அங்கே இப்படியிருக்க, நம்மூரிலோவெனில் குடித்தனக்காரர் அனேகமாய் படிப்பில்லாதவர்கள். இவர்களுக்கு விவஸாய காக்ஷியென்றால் வேடிக்கைப் பார்க்கும் கண்காக்ஷிதான். இக்காக்ஷிகள் என்னவியப்பு அடே! எவ்வளவு பெரிய மக்காசோளம் வந்திருக்கிறதடா! எவ்வளவு பெரிய பரங்கிக்காயடா! எத்தனை பெரிய தென்னங்கொலை! எத்தனை தினிசு அவரைக்காய்கள்! எவ்வளவு பெரிய பசு! யானைபோன்ற எருது! கன்று குட்டி போல ஆடு! பெரிய பன்றி! அழகான கோழிகள்! குஞ்சு பொரிக்கும் பெட்டி! ஜலம் இறைக்கும் இன்ஜின்! எருதில்லாமல் ஓடும் வண்டி! குதிரை இழுக்கும் கலப்பை! என்று பலவிதமான "ஆச்சரியப்படத்தக்க என்றும் பாராத விநோதங்கள் என்று சொல்லிப்போகிறார்கள். இவர்கள் ஒவ்வொரு வஸ்துவின் மேன்மை தாழ்மையும், விருத்தி விருத்தாந்தமும் அறிய முயலுவதில்லை. வஸ்து பெரிதாயிருப்பதை மாத்திரம், பார்க்கிறார்களே யொழிய அதின் குணத்தைப் பார்ப்பதில்லை. இந்நாட்டில் பரிசு கொடுப்பதற்கு என்று ஏற்படுத்தும் மத்தியஸ்தரும் அனேகமாய் அவ்வாறேஇருக்கிறார்கள். பெரிய கத்திரிக்காய்க்குப் பரிசு, இதை அரிந்து பார்த்து சதை கத்திக்கு உறுதியா யிருப்பதையும், காய் பல விதத்தில் உருசி சத்து முதலியவைகளில் மேன்மை பட்டிருப்பதையும் கவனித்துப் பரிசு கொடுப்பதில்லை. மாடு, பசு, எருதுகளுக்குக் கொடுக்கும் பரிசுகளும் ஒரு காலை நேரத்துக்குள்ளே முடிந்துவிடுகிறது. பரிசு கொடுப்பவர்கள் ஒவ்வொரு ஜெந்துவுக்கும், வஸ்துவுக்கும் சீட்டொன்றுபோட்டு அவைகளில் உள்ள மேன்மை குணங்களையும், தாழ்மை குணங்களையும் குறிப்பிட்டு அவ்வஸ்துக்களில் கட்டியிருந்தால் காக்ஷிக்கு வருகிறவர்களுக்கு பெரிய பயனுயிருக்கும். அமெரிக்காவில் மக்கா சோளக்காக்ஷியில்

பின்வருமாறு குணங்களை அறிந்து பரிசு கொடுப்பதுண்டு.

| | | |
|---|---|---|
| 1. முற்றுதல் விதையின் தன்மை | மார்க்கு | 10 |
| 2. ஒன்று போலிருத்தல் | ,, | 15 |
| 3. முத்து | ,, | 15 |
| 4. கதிரின் பளுவு | ,, | 10 |
| 5. நீளமும், மணியின் பிரமாணமும் | ,, | 10 |
| 6. அடி | ,, | 10 |
| 7. முளை | ,, | 5 |
| 8. வரிசையின் சந்து | ,, | 10 |
| 9. நிறம் | ,, | 5 |
| | | 90 |

காக்ஷிக்கு 10 கதிர் அனுப்புவதுண்டு.

1. முற்றியிருப்பது எல்லாவற்றிலும் முக்கியமானது.—விதை முளைக்காவிட்டால் என்ன பயன்? கதிர் உறுதியாயும், பூ கனமில்லாமலும் இருக்கவேண்டும். கையால் அழுத்தி முறுக்கிப் பார்ப்பதுண்டு. விதை பளபளப்பாயும், உமியில்லாமலும், மயிர் ஒட்டியிராமலும் இருக்கவேண்டும். முளை பருத்தாவது, சுருங்கியாவது இருக்கப்படாது.

2. ஒன்றுபோலிருத்தல்.—ஜாதி தனிப்பட்டாற்போல் காட்டும். கதிர் நீளத்திலும், தடிப்பிலும், உருவத்திலும், நிறத்திலும், மணி பிடித்தலிலும், அச்சிலிட்டு எடுத்தாற்போல், ஒன்றைப் பார்த்தால் மற்றொன்று வேறுபடாமலிருத்தல். இவ்வாறு இருப்பதால் இந்த வித்திலிருந்து அதுபோலவே கதிர் உண்டாகுமென்று விளங்குகிறது.

3. முத்து.—ஒன்றுபோலவும் ஒருவாறு அடி சிறுத்தும், தலை பெருத்தும் இருக்க வேண்டும். கதிர் முழுவதும் ஒரே மாதிரி வித்து இருக்கவேண்டும். வித்தின் உருவத்தினுல் கதிரில் நிறைந்திருப்பதும், இடைவெளி அதிகம் இருப்பதும் தெரியவரும். ரஸாயன பாகத்திலும் விதை ஒன்றுபோல் பரீக்ஷையில் காட்டவேண்டும். முளை பெருத்திருக்கும் வித்தில் தைலம் அதிகம் உண்டு. இல்லையானுல் மாவு அதிகம் உண்டு. முளை ஒரு நிதானமாய் வித்தில் இருக்கவேண்டும். வித்தின் ஓரங்கள் ஒழுங்காய் இருக்கவேண்டும். அப்போது இடைவெளி இல்லாமல் அனேக வித்து கதிரில் பொருந்தும். வித்து ஒன்றுபோல் தடித்திருக்கவேண்டும். வரிசை கோணல், மாணல், இல்லாமல் ஒழுங்காயிருக்கவேண்டும்.

4. கதிரின் எடையும், அதிலுள்ள மணியின் எடையும் அறிவது அவசியம்.—சில வகையில் ஒரு செடிக்கு ஒரே கதிர்வந்து அதன் மணிகள் ஒரு ராத்தல் இருக்கும். வேறு சில வகையில் இரண்டு மூன்று கதிர் கண்டு கதிர் ஒன்றில் $\frac{1}{2}$ ராத்தல் மணி இருக்கும்.

5. கதிர் நீளம் முதலியன.—சில வகை $9\frac{1}{2}$-10 அங்குலம் நீண்டும் சில வகை 11-12 அங்குலம் நீண்டும் இருக்கும். கதிரின் அடியிலிருந்து இரண்டு அங்குலத்து உயரத்தில் சுற்றளவானது கதிரின் நீளத்தில் மூன்றில் இரண்டு பங்கு இருக்கவேண்டும். இதைவிட அதிகம் பருத்திருந்தால் அக்கதிர் முதிர்வதற்கு அனேக நாள் செல்லும். கதிர்கள் ரூல் தடிபோல் இருக்கவேண்டும். அடி பெருத்தும், தலை சிறுத்தும் இருப்பது பிசகு. கதிரின் மத்தியில் வித்து நிறைந்தும் உறுதியாயும் இருக்கவேண்டும்.

6. கதிரின் அடியும், நுனியும்.—விதை நிறைந்திருந்தால் மாசூல் அதிகப்படும். அடி கிண்ணத்தில் அச்செடுத்ததுபோல் இருந்து, மணி சந்தில்லாமல் பிடித்திருக்க வேண்டும். அடி சிறுத்திருந்தால் கதிர் தொங்கிப்போம். பெருத்திருப்பது சிரேஷ்டம். அடி நிதானமாய் சொல்பம் அகன்று இருக்க வேண்டும்.

7. வரிசை.—கிரமமாக மத்தியிலிருப்பது போலவே, நுனியிலும் வரிசைகள் இருக்க வேண்டும். நுனி சிறுத்திருப்பது தக்கபடி போஷாப்பில்லாததும், மழை பெய்யாததுமே. நுனி நிறைந்திருப்பது மாசூல் அதிகத்தைக் காட்டும்.

8. வரிசை இடைவெளி.—இது நெருக்கமாயிருந்தால் மாசூல் அதிகம். கதிரின் சுற்றளவு சக்கரம்போல் இருப்பதால் அதிலுள்ள மணிகள் கிணற்று கட்டிடத்துக்கு உதவும். செங்கல்போல் ஒரு பக்கம் சிறுத்தும், மறு பக்கம் பெருத்தும் இருந்தால், சுற்று நெருங்கி இருக்கும்.

9. நிறம்.—ஒன்றுபோல் பளபளத்து இருப்பது கோமளமாய் வளர்ந்ததைக் காட்டும். கதிரில் கலப்பு நிறம் இருக்கப்படாது.

இவ்வாறு குதிரை, எருது, பசு, ஆடு, பன்றி முதலிய மிருகங்களுக்கும், பலவித தானியங்களுக்கும், பழங்களுக்கும், காய்களுக்கும், குணகுணங்களைக்குறிப்பிட்டுப் பரிசு கொடுக்க வேண்டும்.

அமெரிக்கா,ஐரோப்பா தேசங்களில் நடக்கும் விவஸாய காக்ஷிகளும், நமது நாட்டில் நடக்கும் காக்ஷிகளும், உபயோகத்தில் வேறுபட்டிருப்பது ஜனங்களின் வித்தியாபிவிருத்தி அறிவை அனுசரித்திருக்கிறது. நமது நாட்டிலும் காக்ஷிகளின் பலனை அடையவேண்டுமானால், ஜனங்களுக்கு வித்தை கற்பிக்கவேண்டும். இவ்வித்தை பள்ளிக்கூடத்தில் கற்பிப்பது அல்ல. பல விதங்களில் விவஸாய டிபார்டுமெண்டு விஷயங்களை பேபர்கள், பத்திரிகைகள், விவஸாய சங்கங்கள், பரீக்ஷார்த்த பண்ணைகள், பிரத்தியக்ஷத்தில் விஷயங்களைக் காட்டுதல், மாஜிக் லான்ட்ரன் மூலமாய் கற்பித்தல், அமெரிக்கரைப்போல் ரயில் வண்டியில் வித்தை கற்பித்தல், முதலிய மூலமாக அதிக பணம் செலவிட்டாவது, முதலில் கற்பிப்பது அவசியம். பிறகு விருத்தி தானே உண்டாகும்—"தென்னிந்தியா விவஸாயம்."

## CUMMIN SEED.

## சீரகம்.

—o—

இவ்விராஜதானியில் சீரகம் கடப்பை ஜில்லாவிலும், கோயம்புத்தூர் ஜில்லாவின் சில தாலூகாகளிலும் விளைவாகிறது. அநேகமாகப் பம்பாய் இராஜதானியிலிருந்துதான் சீரகம் இவ்விராஜதானிக்குக் கொண்டு வரப்படுகிறது. இங்கு விளையும் சீரகம் மிகவும் கொஞ்சமே. சீரகம் சாகுபடி செய்வதற்குச் செவ்வல் மண் நிலமும், மற்றவகைப் பசலைமண் நிலங்களும் ஏற்றவையென்று சொல்லலாம். அடிமண் நீர் வடிவுள்ளதாய் இருந்தால் மிகவும் நலம்.

இந்தப் பயிரைச் சாகுபடி செய்யுமுன் நிலத்தை நன்றாய் உழுது புழுதியாக்கவேண்டும். கடப்பை ஜில்லாவில் மழைகள் பெய்து ஓய்ந்துவரும் காலத்தில் நிலம் காய்ந்துவரும் தருணம் பார்த்து 5-முதல் 7-தரம் உழுது கட்டி பரம்படிப்பார்கள். ஏகர் ஒன்றுக்கு 8-முதல் 12-வண்டி தொழு எருவை நிலத்தில் சிதறி, கொர்ருக் கலப்பையைக்கொண்டு இரண்டுதரம் உழுது, எருவை மண்ணுடன் நன்றாய்க் கலக்கச் செய்வார்கள். இதன் மேலும் சிலவேளைகளில் ஒருமுறை பரம்படிப்பார்கள். நிலத்தில் ஈரம் சுண்டின பிற்பாடு குண்டகாவைக்கொண்டு மண்ணைக் கிளறுவார்கள். அதற்குப்பின் மழைபெய்து மண் உறைந்துபோனால் மறுபடியும் கொர்ருக் கலப்பையைக் கொண்டு உழவு செய்து மண்ணை நெகிழ்த்திவிடுவார்கள். கடைசியாகக் கொர்ருக் கலப்பையைகொண்டு இரண்டு முறை உழுத பிற்பாடு, நிலத்தில் கொஞ்சம் ஈரம் இருக்கப் பார்த்து, ஏகர் ஒன்றுக்கு 12-படி விதை வீதம் கையினால் வீசி விதைத்து, விதை மறையும்படி கொர்ருக்

கலப்பையைக்கொண்டு குறுக்கே உழுவார்கள். இதன்மேல் ஒன்று அல்லது இரண்டுதரம் பரம்படிப்பார்கள். மூன்று நாட்கள் கழித்து குண்டகாவைக் கொண்டு மேல்மண்ணை லேசாய்க் கிளறிவிடுவார்கள். அதன்பின் 12-அடி சதுரமுள்ள பாத்திகளாகும்படி பக்கத்திலுள்ள மண்ணை லேசாய் வரண்டி சிறு வரப்புகள் போடுவார்கள். இப்படி உண்டாக்கிய பாத்திகளைச் சாதாரண உப்புப் பாத்திகளை ஸமதளப்படுத்தும் அச்சுக்கட்டு தந்துலு என்னும் கருவியைக்கொண்டு வேலைசெய்து ஸமதளப்படுத்துகிறுர்கள். இந்தப் பாத்திகளின் வரப்பு ஓரங்களில் நாட்டுக் கலப்பையைக் கொண்டு சற்று ஆழமாய் உழுது தண்ணீர் பாயும் கால்களாக்குகிறுர்கள். இந்த வேலை எல்லாம் விதைத்த நாலு நாட்களுக்குள் நடத்தி முடிக்கவேண்டும். ஐந்தாம் நாள் பாத்திகளில் இறவைத்தண்ணீர் பாய்ச்சுகிறுர்கள். சிலவேளைகளில் விதைக்கும்போது போதுமான ஈரமில்லாவிட்டால் புழுதி விதைப்புக்குப் பருவம் செய்வதைப்போல் செய்து, விதைத்த உடனேயே பாத்திகளைக் கட்டி, மறுநாள் தண்ணீர் பாய்ச்சுகிறுர்கள். முதல் தண்ணீர் பாய்ச்சிய மூன்ரும் நாள் இரண்டாம் தண்ணீர் விடுகிறுர்கள். வேறு சில இடங்களில் முன்சொன்னபடி நிலத்தை நன்ருய்ப் புழுதியாக்கியபின், வரப்புகள் போட்டுப் பாத்திகளாக்கிக் கால்கள் பிடித்து, அதன் பின்னே பாத்திகளில் விதைத்து உடனேயே தண்ணீர் பாய்ச்சி, அச்சுக்கட்டி தந்துலு என்னும் கீருவியைக்கொண்டு மண்ணை நிரவி ஸமதளப்படுத்துகிறுர்கள். இதற்கு ஐந்து நாள் பொறுத்து கொஞ்சமாக இரண்டாம் தண்ணீர் பாய்ச்சுகிறுர்கள். முன் சொன்ன இரண்டு முறைகளைவிட இம் முறையே மேன்மையானதென அங்குள்ள கிருஷிகர் நினைக்கிறுர்கள். விதைத்த 11-நாள் முதல் 13-நாட்களுக்குள் பயிர் முளைக்கும். அப்படி 13-நாட்களுக்குள் முளைக்கவில்லையானல், கடைசி முறை தண்ணீர் பாய்ச்சியதற்கு 4-நாட்கள் கழித்து லேசாய் ஒரு தண்ணீர் பாய்ச்சுவார்கள். அதாவது முக்கால் பாத்தியில் தண்ணீர் பாய்ந்த உடனே மறுபாத்திக்குத் தண்ணீர் மாறிவிடுவார்கள். இதில் பயிர் திட்டமாய் முளைத்துவிடும். விதைத்த 12-நாட்களுக்குள் பயிர் முளைத்துவிட்டால், முளைத்த 12-நாட்கள் வரைக்கும் தண்ணீர் பாய்ச்சமாட்டார்கள். முளைப்பதற்கு முன் கடைசியாய்த் தண்ணீர் பாய்ச்சியது முதல் 8-நாள் பொறுத்து கைக்களைபறண்டியைக் கொண்டு பயிர் சேதமடையாமல் நிலத்திலுள்ள களையைப் பறண்டுவார்கள். ஏகர் ஒன்றுக்கு 12-முதல் 20-ஆட்கள் வரையில் இதற்குச் செல்லும். இவர்கள் வரப்புகளின் மேல் உட்கார்ந்தபடியே பாத்திக்குள் இறங்காமல் களை பறண்டுவார்கள். இப்படிக் களை பறண்டின பின் 3-அல்லது 4-நாட்கள் பொறுத்துப் பயிர் வாட்டம் கண்ட உடனே தண்ணீர் பாய்ச்சுவார்கள். இதற்கு 12-அல்லது 13-நாட்கள் பொறுத்து பூ அரும்புகள் உண்டாகும். உடனே ஒருமுறைதண்ணீர் பாய்ச்சுவார்கள். இதற்கு 'சிவப்பு பூத்தண்ணீர்' என்று பெயர். இதற்கப்பால் 10-நாட்கள் கழித்து ஒருமுறை தண்ணீர் பாய்ச்சவேண்டும். இதற்குக் காய்த்தண்ணீர் என்று பெயர். அதற்கப்பால் அறுவடைக்கு முன் 2-அல்லது 3-நாட்களுக்கு முன் கடைசித்தண்ணீர் பாய்ச்சுவார்கள். அதற்கு 'அறுவடைத் தண்ணீர்' என்று பெயர். காய்களிலுள்ள விதைகள் விளைந்து கொஞ்சம் காய்ந்த உடனே செடிகளை வேருடன் பிடுங்குவார்கள். ஓர் கைப்பிடி செடிகள் பிடுங்கி ஆன உடனே

அவைகளின் தலைப்புறம் மெதுவாய்க் கீழே வைத்துப் பின்வேர் பக்கம் வைக்கிறார்கள். இவ்விதமாகப் பயிர் அறுவடையாகும். உடனே பிடுங்கிய செடிகளைக்கூட்டி எடுத்துப் பெரிய கூடையில் வைத்துக் களமேட்டிற்குக் கொண்டுபோய் போட்டு ஸமமாய்ப் பரப்பி ஐந்து அல்லது ஆறு நாட்களுக்கு காயவிடுவார்கள். இப்படிக் காயும்போது ஒவ்வொரு நாளும் மூங்கில்தடி கொண்டு ஒருவன் இச்செடிகளைத்தூக்கி அலைத்துப் புரட்டிப் போட்டு லேசாய்த் தட்டுவான். அப்படிச் செய்யும்போது கொஞ்சம் காய்ந்த இலைகளும், கொஞ்சம் காய்ந்த விதைகளும் நிலத்தில் உதிரும். இப்படி ஐந்தாறு நாள் செய்த பின் தாள்களைச் சேர்த்துச் சற்று தூரத்தில் குவித்து விட்டு உதிர்ந்திருக்கும் விதைகளையும், இலைகளையும் கூட்டி, எடுத்துக் காற்றில் தூற்றி, விதைகளைப் பிரித்து வைத்துக் கொள்ளுகிறார்கள். குவித்துவைத்த தாள்களை ஒன்று அல்லது இரண்டு நாளைக்குக் காயவிட்டு,மாட்டுக் காலில்போட்டுப் பிணையலடிப்பார்கள். இப்படி அடிக்கும்போதே தாள்களைப் புரட்டிக் கொடுப்பார்கள். விதைகள் முழுவதும் உதிரும்படி பிணையலடித்த பின் தாள்களை அரித்து வேறாக்கி விதைகளைக் கூட்டி எடுத்துத் தூற்றிச் சேர்த்து வைத்துக் கொள்ளுகிறார்கள். விதைகள் நன்றாய்க் காயாவிட்டால் ஒன்று அல்லது இரண்டு நாட்களுக்குக் காயவைத்துப் பத்திரப் படுத்திக் கொள்வார்கள்.

சீரகம் 2½-மாஸம் அல்லது 80-நாள் பயிர். கடப்பை ஜில்லாவில் ஸாதாரணமாய் ஆருத்ர கார்த்தியில் அதாவது ஜனவரி மாஸம் ஆரம்பத்தில் விதைக்கிறார்கள். ஒன்று முதல் இரண்டு அடி வரையில் வளரும். புஷ்பிக்கும் வரையில் நோய்நொடிகள் கிடையாது.

புஷ்பித்த பின் 'அக்னிமண்டை' நோய் என்று ஒரு வித நோய் உண்டாகும். இதனால் செடிகள் தீயில் வாட்டி எடுத்ததுபோல் கருகி, சுருண்டு, கருத்து, உருமாறி இருக்கும். இந்த வியாதி பயிர் புஷ்பித்த உடனே காணுமானால் அதில் மாசூல் ஒன்றும் அகப்படாது. சில நாட்கள் கழித்து உண்டானால் கொஞ்சம் மாசூல் கிடைக்கலாம். இந்த வியாதி உண்டான உடனே தண்ணீர்ப் பாய்ச்சுவதை நிறுத்தி விடவேண்டும். ஏனென்றால் வியாதி தண்ணீரின் வழியாய் ஒரு செடியிலிருந்து வேறொரு செடிக்குத் தொத்தக்கூடும். சீரகப் பயிரைத் தாக்கும் மற்றொரு வியாதிக்கு 'மோர்நோய்' அல்லது 'சாம்பல்நோய்' என்று பெயர். ஏனென்றால் இந்த வியாதி தாக்கின செடிகள் முழுமையும் மோர் அல்லது சாம்பல் தெளித்ததுபோல் நிறம்கெட்டுத் தோன்றும். இந்த வியாதி அநேகமாகக் காய்கள் விளைவாகும் தருணத்தில் உண்டாகிறது. சில சமயங்களில் பயிர் அறுவடை செய்து களமேட்டில் கொண்டுபோய் வைத்திருக்கும் போதுகூட வைத்த ஒரு நாளைக்குள் வந்தாலும் வரும். இதனால் சீரகம் மாசூலின் தரம் குறைவாகும். நிலத்தில் பயிர் நிற்கும்போது இந்த வியாதி உண்டானால் உடனே அறுவடை செய்து விடவேண்டும். இந்தப் பயிருக்கு இன்னொரு வியாதியும் உண்டாகிறது. அந்த நோயில் தண்ணீர் பாய்ச்சும்போது செடிகள் அடியோடு சாய்ந்துவிடும். ஆனால் இந்த வியாதியால் நஷ்டமடையும் செடிகள் கொஞ்சமே. அப்படி சாயும் செடிகளைத் தலைதூக்கி நிறுத்தி மண் அணைத்து வைக்க வேண்டும். மழையும், கடும்பனியும், மூடுமேகமும், மந்தாரமுந்தான் இந்த நோய்க்குக் காரணமென்று அபிப்பிராயப் படுகிறார்கள். ஸரியானபடி விளைந்தால் ஏகர் ஒன்றுக்கு 15-முதல் 20-மணங்கு சீரக மாசூல் அகப்படும். ஏகர் ஒன்றுக்கு மொத்தவருமானம் ரூபா 120 ஆகும்.இதற்குச் செலவு:—7 உழவு ரூ. 7;10 வண்டித்தொழு எரு ரூ 10; கொர்ரு உழவு, குண்டகா உழவு, மரமடித்தல் ரூ. 5; நீர்ப் பாய்ச்சல் ரூ. 8; களை பறித்தல் (16 பெண்கள்) ரூ 3; அறுவடை (5-ஆண்+16 பெண்கள்) ரூ. 4-8; அடித்து ஒப்படி செய்தல் ரூ. 3-8; விதைக்கிரையம் ரூ 9; மொத்தம் ரூ. 50; செலவுபோக லாபம் ரூ. 70.

கோயம்புத்தூர் உடுமலைப்பேட்டை தாலூகாவில் இந்தப் பயிர் ஜூன் மாஸத்தில் விதைத்து ஆகஸ்டு மாஸத்தில் அறுவடை

செய்கிறார்கள். தாராபுரம் தாலுகாவில் டிசம்பர் மாஸத்தில் விதைத்துப் பிப்ரவரி மாஸத்தில் அறுவடை செய்கிறார்கள். இந்த ஜில்லாவில் சீரகம் சாகுபடிசெய்யும் முறை கடப்பை ஜில்லாவின் முறைக்கு சற்று வித்தியாஸமாயிருக்கிறது. கரும்பு நடுகை முதலிய வேலைகள் முடிந்தவுடனே கோயம்புத்தூர் கிருஷிகர் நிலத்தை நன்றாய் உழுது புழுதியாக்கி வைக்கிறார்கள்; முதல் உழவில் கட்டிகளாகப் பெயர்ந்தால் சம்மட்டி போன்ற கட்டைகளால் அந்தக் கட்டிகளை உடைத்து நிலத்தை 5,6-தரம் உழுகிறார்கள். சீரகம் விதை சிறியதாகையால் கட்டி கட்டியாயிருக்கும் நிலத்தில் ஸரியாய் முளைக்காமல் கெட்டுப்போகும். அதனால் நிலம் சமதளமாயும், தெள்ளுப் புழுதியாகவும் இருக்கவேண்டியது அத்தியாவசியம். இந்தப் பயிர் சாகுபடி செய்வதில் கவனிக்கவேண்டிய மற்றொரு காரியம் என்னவெனில், இதற்கு நன்றாய் மக்கின பழைய எருவே மிகவும் உபயோகமானது. கோயம்புத்தூர் கிருஷிகர் ஒரு நிலத்தில் ஒரு வருஷத்தில் சீரகம் பயிர் செய்யவேண்டுமானால் அதற்கு முந்திய பயிருக்கு அதிகமான தொழு எருவையும், குப்பை எருவையும் கொட்டுகிறார்கள். அது ஒரு வருஷகாலமாக மக்கி நிலத்தில் கலந்து ஸரியாய்ப் பக்குவமடைந்திருக்கிறது. அந்த ஸ்திதியில் சீரகப் பயிருக்கு அது செழிப் பூட்டுகிறது. ஒரு நிலத்தில் ஒரு வருஷம் கரும்பு, கோதுமை, கேழ்வரகு முதலாகிய தோட்டக்கால் பயிரிட்டால், மறுவருஷம் அதில் பருத்தி மானாவாரியில் பயிரிடுகிறார்கள். அந்தப் பருத்தி மாசூல் எடுத்து முடிந்தவுடன் நிலத்தை முன் சொன்னபடி உழுது பருவப் படுத்திச் சீரகம் விதைக்கிறார்கள். கரும்புக்கும், பருத்திக்கும் போட்ட எரு சீரகப் பயிருக்கும் உபயோகப் படுகிறது. இப்படி முன் கூட்டித் தக்கபடி எருவிடாத நிலங்களில் மக்கின சாணி எருவைப் போட்டுக் கலந்து உழுது சீரகம் விதைக்கிறார்கள். உடுமலைப்பேட்டை தாலுகாவில் சில இடங்களில் நீர் பாய்ச்சாமலே மானாவாரிப் பயிராகச் சீரகம் பயிரிடுகிறார்கள். தண்ணீர்த் தட்டைத் தாங்கக் கூடியதான கருமண் நிலங்களில் அப்படி மழையின் உதவியால் பயிர் செய்கிறார்கள்.

இறவைத் தண்ணீர் அகப்படும் தோட்டக்கால் நிலங்களில், நிலத்தில் தண்ணீர் பாய்ச்சி, புழுதியில் உழுது, பருவம் வந்தபோது பாத்திகளாக்கி, விதையை விதைத்துக் கையினால் மண்ணைப் பரப்பி, லேசாய் விதையை மூடிவிடுகிறார்கள். நிலத்திலுள்ள ஈரத்திலேயே விதைகள் முளைக்கின்றன. விதைத்தபின் விதை முளைப்பதற்காகத் தண்ணீர் பாய்ச்சும் வழக்கம் இங்கு அவ்வளவாயில்லை. பயிர் வளர்ந்து வரும்போது சீரகச் சக்களத்தி, அல்லது, காட்டுச் சீரகம், கோரை, புல் முதலியவைகளைச் சிறு முனைக் கொம்புகளால் கொத்தி எடுத்து எறியவேண்டும். இளம் பயிரில் சீரகத்துக்கும் அதன் சக்களத்திக்கும் தெளிவான வித்தியாசம் தெரியாது. கொஞ்சம் அநுபவமுள்ள வேலையாட்களுக்குத் தெரியும். இந்தப் பயிர் 23-அங்குல மழையளவும், உஷ்ண பூமியாயுமுள்ள கடப்பை ஜில்லாவில் உண்டாகிறது. $25\frac{1}{2}$ அங்குலம் மழைப்பதமும், குளிர்ச்சியுள்ள நாடாகிய கோயம்புத்தூர் ஜில்லாவிலும் உண்டாகிறது. ஜூன் மாஸத்திலும் விதைக்கிறார்கள். டிசம்பர் மாஸத்திலும் விதைக்கிறார்கள். அதாவது சாரல் காலத்திலும், மாரி காலத்திற்குப் பின்னும் இது பயிராகிறது. இந்தப் பயிருக்கு அதிக மழை ஆகாது. கொஞ்சம் பனி அவசியமெனத் தெரிகிறது. ஆனால் கடும் பனியும், மப்பு மேகமுமாயிருந்தால் நோயுண்டாகும். சீரகம் கருவடீ மண்ணிலும் பயிராகிறது. செவ்வல் மண்ணிலும் பயிராகிறது. இதனால் எல்லா ஜில்லாக்களிலும் பயிர் செய்யக்கூடும் என்று வெளியாகிறது. குளிர்ச்சியுள்ள இடங்களிலும் 40-, அல்லது 50-நாட்களுக்குத் தொடர்ந்து பனி பெய்யக்கூடிய எல்லா இடங்களிலும், அக்காலத்தில் சீரகம் பயிரிடக்கூடும். இது கிருஷிகருக்கு லாபம் கொடுக்கக்கூடிய பயிர்களில் ஒன்று. மூன்று மாஸக்காலத்துக்குள் 5, 6-முறை மட்டும் தண்ணீர் இறைத்து, எல்லாச் செலவுகளும் போகத் தனி லாபம் ரூ 70-அடையக்கூடுமானால், அது சிலாக்கியமான பயிரல்லவா? இந்தப்பயிரைத் தென் ஜில்லாக் கிருஷிகர் ஸாகுபடி செய்து கிருஷியை விருத்திசெய்வார்களென நம்புகிறோம்.

"கிருஷிகன்."

## REVIEW OF THE PRESS.
## பத்திரிகை ஆராய்ச்சி.

### NURSING OF SICK ANIMALS.
### வியாதிப்பட்ட பிராணிகளின் போஷணை.

இந்த விஷயமாக நவம்பர் மாஸத்து "கிருஷிகன்" பத்திரிகையில் ஒரு வியாஸம் காணப்படுகிறது. வியாதிப்பட்ட பிராணிகளுக்கு வியாதியின் இயல்புக்குத் தகுந்தபடி ஆறுமணி நேரத்திற்கு ஒரு முறையாவது கஞ்சி கொடுக்கவேண்டும். ஒரு பிராணிக்குவைத்த ஆகாரத்தை அது உண்ணாமலிருந்தால் ஆகாரத்தை உடனே எடுத்துவிடவேண்டும். தளர்ச்சியும், ஆயாசமும், உண்டாகக் கூடிய சில வியாதிகளில் அதிசீக்கிரத்தில் ஜீரணமடைந்து சரீரத்தில் சேரக்கூடிய மேன்மையான ஆகாரத்தை கொடுக்கவேண்டும். சிலவேளைகளில் வியாதி சொஸ்தமடையும்போது பசி அதிகமாயிருக்கும். அப்பொழுது கால் நடைகளுக்குச் சரியான ஆகாரத்தைக் கொடுத்து அஜீரணமாகாமல் பாதுகாக்க வேண்டும். கால்நடைகளைக் கட்டிவைக்கும் கொட்டங்களில் சரியானபடி காற்றோட்டம் இருக்க வேண்டும். கொட்டங்களில் சாணிமுதலான அசுத்தங்களை அப்புறப்படுத்தி விடவேண்டும். வியாதிப்பட்ட பிராணிகளிருக்கும் இடத்தில் அரைமணி நேரமாவது வெய்யில் படவேண்டும். சூரிய ஒளியினால் ரத்தம் விருத்தியடைகிறது. துர்க்கந்தம் பறந்துபோய்விடுகிறது. சுகமான மல ஜல விஸர்ஜனங்களுக்கு அனுகூலமான ஹேது உண்டாகிறது. விஷக்கிருமிகள் நாசமடைகின்றன. படுக்கை விஷயத்தில் மிகுந்த கவனம் செலுத்தவேண்டும். பிராணிகள் படுத்துப் புரளுவதற்கு தகுந்த விதமாய் வைக்கோல்படுக்கை அமைக்கவேண்டும். குளிர்ந்த காற்று அடிக்கும் போதும், மழை பனி பெய்யும் போதும், வியாதிப்பட்ட பிராணிகளிக்கு கம்பளிப் போர்வை அவசியம். சில வியாதிகளில் கால் நடைகள் ஒரு பக்கமாகவே படுக்கும். அவைகளுக்கு ஸௌகரியமானபோது எழுந்திருக்கக் கூடிய சக்தியிருந்தால் அப்படிப்படிப்பதைத் தடுக்கக்கூடாது.

### CALVES OF COWS.
### பசுக்கன்றுகள்.

இந்த விஷயமாய் புரட்டாசி மாஸ "தென்னிந்யா விவஸாய"த்தில் ஒரு சிறந்த வியாஸம் காணப்படுகிறது.

கர்ப்பத்திலேயே கன்று போஷிக்கப் படவேண்டும். தகுந்த தீனியில்லாத பசுக்களின் கன்று பின்னால் எவ்வளவு பராமரிக்கப்பட்டாலும் ஸுகப்படுவதில்லை. ஜாதிகாளை பொலியும்படிச் செய்த பசுவுக்குத் தகுந்த ஊட்டம் கொடுக்கவேண்டும். கன்று பிறந்த உடன் பசு அதை நக்காவிட்டால் துணியாலாவது, வைக்கோலினாலாவது, அதை உலரும்படி துடைக்கவேண்டும். பால் குடிக்கும் படி முலைக்காம்புகளை வாயில் வைக்கவேண்டும். முதல் சீழ்ப்பாலைக்கன்று குடிப்பது அவசியம். ஏனென்றால், இந்தப்பாலில் 100-க்கு 17·6 பாகம் சிகண வஸ்துவும், அதிக 'சாம்பல்' ஸத்தும் இருக்கின்றன. சாதாரணப்பாலில் இருப்பதை விட ஆறு மடங்கு அதிகமான சிகணவஸ்து சீழ்ப்பாலில் இருக்கிறது. சீழ்ப்பால் வயிற்றுச் சிக்கலைக் கண்டித்துக் கன்றின் வயிற்றிலுள்ள அசுத்தத்தை வெளியாக்குகிறது. அது பலத்தையும் கொடுக்கிறது. ஒருவாரம் வரையில் கன்று தாய்ப்பால் குடிக்க வேண்டியது அவசியம். பிறகு மற்றப் பசும்பாலையும் குடிக்கும்படி செய்யலாம். இயற்கையில் பசுவோடு கன்று திரிந்தால் ஒரு நாளில் 10-15 தரம் பால் ஊட்டும். பசுவின் வயிற்றிலிருந்து கன்று பிரிந்ததும், 18-24 மணிநேரம் கன்றைப் பட்டினி போடுவதுண்டு. முதல் முதல் பால் குடிக்கக் கன்றுக்குத் தெரியாததால் பால் பொறை யேறுவதுமுண்டு. அப்படி நேராமலிருக்க கன்றைக் கீழ்பார்க்கும் படிக் கற்றுக் கொடுக்கவேண்டும். இரண்டு, மூன்று விரலைப் பாலில் நனைத்து அதைச் சப்பும்படி கற்பிக்கவேண்டும். வெண்ணெய் அதிகமிருக்கும் பாலைக் கொடுத்தால் கெடுதியுண்டாகும். 100-க்கு 3-பாகம் வெண்ணெய் உள்ள பாலைக் கொடுப்பது நலம். கன்று தீனி தின்னவிட்டால் பாலில் வெந்நீர் கலந்தாவது, பாலைக் காய்ச்சியாவது கொடுத்தால் தீனிதானே தின்னும். புளித்த பாலைக் கன்றுக்கு

ஒரு பொழுதும் கொடுக்கக்கூடாது. தானியமும், புல்லும் கொடுத்தால் கன்று கொழுக்கும். ஆளி விதையை அரைத்து 3-4 வாரம் வரையில் பாலில் கலந்து கொடுக்கலாம். தவிடு தெளித்தால் தானியத்தை சீக்கிரம் தின்னக் கற்கும். நாக்கிலும் தடவவேண்டும். இளம் புல் கொடுப்பதுண்டு. கன்று தண்ணீரை அதிகம் குடிக்கும். தொட்டி ஜலம், பால் பாத்திரம் முதலியவைகள் சுத்தமாயிருந்தால் பேதி, சொறி, முதலியவைகள் வாராமல் தடுக்கலாம். வேளா வேளையில் தீனி கொடுக்க வேண்டும். இரண்டு காண்டி விளக்கெண்ணெயைக் கொதிக்கும் பாலில் விட்டுக் கொடுத்தால் வயிறு சுத்தப்படும். பால் குடிப்பது நின்ற உடன் சிகண வஸ்துக்கள் நிறைந்த தானியம், பிண்ணுக்கு முதலியவைகளைக் கொடுக்கவேண்டும்.

---

## TREE PLANTING.
## மரம் வைத்தல்.

---

இந்த விஷயமாக மார்கழி மாஸத்துத் "தென்னிந்தியா விவஸாய"த்தில் ஒரு சிறந்த சிறு வியாஸம் காணப்படுகிறது.

மரம் நட்டால் காற்றின் கொடுமை தொலைந்து அநேக தோப்புகளுக்கும், செடிகளுக்கும், நஷ்டம் வராமல் காப்பாற்றலாம். மரங்களிருந்தால் காற்று குளிர்ந்திருக்கும். கோடைகாலங்களில் ரஸ்தாவில் நடப்பவர்கள் சாலை மரம் வரும்போது குளிர்ந்து சந்தோஷப்படுவதும், வெட்ட வெளியில் அவஸ்தைப் படுவதும் சொல்லவேண்டியதில்லை. அதே காரணத்தினலேயே காடுகள் குளிர்ந்திருக்கின்றன. மரமற்ற வெளிகள் சூடாயிருக்கின்றன. மரங்களிருந்தால் மழை பல மாஸங்களில் பெய்யும். பெய்யும் மழை புரண்டு மண்ணை அடித்துக்கொண்டு ஆறுகளில் வண்டலாகப்போய் ஆற்றோரத்து வயல்களிலும், முக்கியமாய் சமுத்திரத்திலும் சேர்க்கிறது. மழைப்பெருக்கால் ராஜாங்கத்துக்கு உண்டாகும் நஷ்டங்கள் பல. ஆற்றங்கரைகள் உடைந்துபோவதும், ரோட்டுகள் அறுந்துபோவதும், வாராவதிகள் முறிந்துபோவதும், ஏரிகள் உடைந்துபோவதும், ராஜாங்கத்துக்கு நஷ்டங்கள். செய்கால் நிலத்தில் நயமான எருப்போன்ற மேல் மண்ணை எடுத்துப் போவதும், நிலங்களைக் கிழித்து பள்ளங்கள் செய்வதும், குடித்தனத்துக்கு நஷ்டங்கள். மரங்கள் எங்கும் இருந்தால் பெய்யும் மழை பூமியில் துளித் துளியாய் விழும். அப்போது அதை மண் குடிக்கும். ஜலம் சேர்ந்து வெள்ளமாகப் புரண்டுபோக சாவகாசமிருக்காது. இப்படி நிதானமாக விழும் ஜலத்துளிகள் மண்ணுக்குள் சென்று ஊற்றுக் கண்களைப் போஷித்து, அவ்வூற்றுக் கண்கள் அங்கங்கே வெளிப்பட்டு ஆறுகளுக்குப்போய் தற்காலம் வெட்டாறாய் இருக்கும் ஆறுகள் ஜீவநதிகளாகிவிடும். கிணறுகள் வெட்டினால் ஊற்றுகள் அகப்பட்டு, ஜலம் அமோகமாய்க் கிடைக்கும். கிணற்றுக்கு அதிக ஆழம் வெட்டவேண்டியிராது. பணச் செலவும் குறையும். மரங்களிருந்தால் பலவித காய்கனிகள், பழங்கள், வித்துக்கள் அதிக சிரமமில்லாமல் கிடைத்து அனேக உயிரைப் போஷிக்கும். காட்டுப் பதார்த்தங்களாகிய தேன், மெழுகு, அரக்கு, பட்டு முதலியவைகள் ஏராளமாய்க் கிடைக்கும். பலவித மரங்கள் வீடு கட்டவும், வேலைக்கு உதவவும் கூடும். விறகு வேண்டியவரைக்கும் கிடைக்கும். அடுப்புக்கரி செய்வதில் பலவித தைலங்கள் கிடைக்கும். அவைகளைச் சேர்க்க சில தொழில்கள் விருத்தியாகும்.

மரம் இருந்தால் பக்ஷிகள் வந்து அடையும். இவைகள் குடித்தனத்துக்குப் பெரிய உபகாரிகள். நாசம் செய்து நஷ்டத்தை உண்டாக்கும் பலவிதப் பூச்சிகளைப் பக்ஷிகள் அழித்துவிடும். மரங்களை வளர்ப்பதில் கெடுதிகளும் இருப்பதால் அவைகள் உண்டாகாதபடி மரங்களை தூரம் தூரமாகவும், வேலிக்கால்களிலும், ரஸ்தா ஓரங்களிலும் உபயோகமில்லாத இடங்களிலும் நட்டுப் பயிர் செய்வது தேச க்ஷேமத்தை உண்டாக்கும் வழி. இம்மரங்கள் வெவ்வேறு நிலத்துக்கு வேறுபட்டிருக்கிறபடியால் அவைகளைத் தெரிந்து பரிபாலிக்கவேண்டும்.

களர் நிலத்தில் நுணா, கருவேலி, கொருக்காபுளி, வேம்பு, புளியம், விளாம், தென்னை, கருவேலம், ஈச்சை முதலிய மரங்களும்.

கரிசல் நிலத்தில் வேம்பு, வேலமரங்களும்.

கல் நிலத்தில் வெள்வேல், வாடமடக்கு, மாமரம், வேப்பமரங்களும்.

மணல் நிலத்தில் கொருக்காபுளி, தேக்கு, தென்னை, மா, பலா, முந்திரி, மூங்கில், புன்னை, பனை, ஈச்சு, சவுக்குமரங்களும்.

செவ்வல் நிலத்தில் தோட்டக்கால் மரதினுசுகளும்.

செவ்வல், மணல் நிலங்களில் ஜலம் கிடைக்கும் இடங்களில் எல்லாவித மரங்களும் வளர்கின்றன.

## CHOULTRIES.
## தர்ம சத்திரங்கள்.

இவைகளைப்பற்றி நவம்பர் மாஸத்து "பூர்ண சந்திரோதய"த்தில் ஒரு வியாஸம் காணப்படுகிறது.

முன்காலங்களில் புண்ணிய தீர்த்தங்களின் மகிமையும், ஈசுவர லீலைகளைவிளக்கிக் காட்டும் மும்மூர்த்திகளுடைய ஆலயங்களும் ஜனங்களை யாத்திரை செய்யும்படித் தூண்டின. இந்த யாத்திரைக்காரர்களுடைய ஸௌகரியங்களை உத்தேசித்து, மார்க்கங்களில் காதவழிக்குட்பட்டு நீர்வளம் பொருந்திய இடங்களில், அரசர்களும், பிரபுக்களும் சத்திரங்கள் ஏற்படுத்தினார்கள். முதல் முதலில் பிராமணர்களுக்கும், பிறகு எல்லா ஜாதியார்களுக்கும் ஏற்பட்டன.

முதலில் இந்தப் பாதைகளெல்லாம் கால் நடைப் பாதைகளாக இருந்தன. பிறகு வண்டிப்பாதைகளாக மாறின. அவைகளின் வழியாய் வியாபாரிகளும் செல்லத் தலைப்பட்டார்கள். க்ஷேத்திரங்களில் உற்சவங்கள் ஏற்படவே வியாபாரங்கள் பலப்பட்டன. இதனால் சிறு கிராமங்களாக இருந்தவைகள், நாளடைவில் பட்டணங்களாகத்தொடங்கின. இவைகளில் முன் ஏற்படுத்தப்பட்டிருந்த சத்திரங்களும் வரவர விருத்தியடைந்தன. முக்கியமாய் காசி, ராமேசுவரம் என்ற இரண்டு பெரும் க்ஷேத்திரங்களுக்குச் செல்லும்படியான பாதைகளில் சத்திரங்கள் மிகவும் அபிவிருத்தியாயின.

இந்தக் காலத்திலோ முக்கிய ஸ்தலங்களுக்கெல்லாம், ரயில் பாதைகள் ஏற்பட்டிருக்கின்றன. ஸாமான்கள் விலைக்குச் சுலபமாய்க் கிடைக்கின்றன. கிளப்புகளும், காப்பிக்கடைகளும் எங்கும் ஏற்பட்டுவிட்டன. ஆகையால் மேலே சொல்லப்பட்ட சத்திரங்கள் இந்தக் காலத்தில் முன்போல் பிரயோஜனப்படுவதில்லை.

முன் காலத்தைக் காட்டிலும் இந்தக் காலத்தில் ஜனங்கள் அதிகமாக ஸ்தலயாத்திரை செய்தாலும், அவர்கள் செய்யும் யாத்திரை விரைவாகவே நடைபெறும் பொருட்டு, சிறு க்ஷேத்திரங்களுக்கு அநேகமாய்ப் போகிறதில்லை. ஆகையால் சிறு கிராமங்களிலுள்ள சத்திரங்களின் அன்ன பானாதிகளை நிறுத்தி விடுதல் மிகவும் நலமாம். ஆனால் இப்படிச் செய்ய சட்டம் இடங்கொடுக்காது. ஆகையால் சட்டத்தை மாற்றுவது அவசியம். பெரிய உற்சவங்களில் மட்டும் முன் ஏற்பாட்டைக் கைக்கொண்டு மற்றைக் காலங்களில் செய்யும் செலவுகளை மீதப்படுத்தி பெரிய க்ஷேத்திரங்களிலும், ஜன ஸமூகங்கள் கூடுகிற முக்கியமான நகரங்களிலும், ஜனவாஸத்துக்கு அதிக சத்திரங்கள் ஏற்படுத்த வேண்டும். உதாரணமாக முற்காலத்தில் சோழவந்தான் என்னும் கிராமமானது ராமேசுவர யாத்திரைக் காரர்கள் தங்கும் இடமாக இருந்தது. ரயில் ஏற்பட்டபின் அதிலுள்ள இரண்டு பெரிய சத்திரங்களும் பயன்படாமற்போயின. அவைகளுக்கு மூவாயிரம், நாலாயிரம் ரூபாய் வருஷ வரும்படி ஏற்பட்டிருக்கிறது. அந்தச் சத்திரங்கள் இதுவரையில் மதுரைத் தாலூகா போர்டு விசாரணைக்குள்ளிருந்தது. தாலூகா போர்டார் அதன் ஐவேஜியிலிருந்து அந்தச் சத்திரங்களுக்கு அவசியமான பொருளைச் செலவுசெய்து மீதித்தொகையைக்கொண்டு மதுரை ரயில்வே ஸ்டேஷனுக்கு ஸமீபத்தில் இரண்டு பெரிய கட்டிடங்கள் ராமேசுவர யாத்திரைக்காரர்களின் ஸௌகரியத்துக்காகக் கட்டியிருக்கிறார்கள்.

இப்படி இன்னும் அநேக ஜில்லாக்களிலும் முன் காலத்தில் ஏற்பட்ட சத்திரங்கள் இப்பொழுது பிரயோஜனமில்லாமலிருக்கும். ஆகையால் அவைகளை தற்கால வேறுபாடுகளுக்குத் தக்கபடி யாத்திரிகள் தங்குவதற்கும், உற்சவகாலங்களில் ஜனங்கள் தங்குவதற்கும், ஜல வஸதியுடனே நாலு ஜாதியாருக்கும் வெவ்வேறாகக் கட்டிடங்கள் கட்டவேண்டும். அங்கஹீனர்களுக்கும், பரம ஏழைகளுக்கும், தள்ளாக் கிழவர் முதலியவருக்குமட்டும் அன்ன பானாதிகள் கொடுத்து மீதித் தொகையைக்கொண்டு ஆயுர்வேத வைத்தியசாலைகள் அவ்விடங்களுக்குச் சமீபத்திலேயே அமைக்கவேண்டும். இன்னும் மீதமிருக்குமானால் ஊருக்குத் தக்கபடி வித்தியாசாலைகள் ஏற்படுத்தலாம்.

இதே மாதிரியாக தேவகோட்டை கானாடு காத்தான் முதலிய கிராமத்துச் செட்டிமார்களும் அவர்களுடைய சத்திரங்களில் ஏழைகளுக்கும், வியாதியஸ்தர்களுக்கும் அன்னபானாதிகள் கொடுத்து

பாக்கி திரவியத்தைக்கொண்டு கைத்தொழில் சாலைகளையும், பள்ளிக்கூடங்களையும் ஏற்படுத்தி நாட்டின் அறிவையும், செல்வத்தையும் அபிவிருத்தி பண்ணலாம். வித்தியாசாலைகளிலேயே அவரவருக்கு ஏற்ற தொழில்களைக் கற்பித்துக்கொடுக்கலாம். அவ்வாறு செய்யும் பக்ஷத்தில், நாட்டுக்கு மிகவும் நன்மையுண்டு. தர்மம் செய்பவர்களுக்கும் நீடித்த சுகிர்தம் உண்டு. தவிர நம் நாட்டில் அநேகம் பேர்கள் ஏழைகளாயிருக்கிறார்கள். அவர்களுக்கு எப்பொழுதும் பயன்படக்கூடிய கைத்தொழில்களைக் கற்பிப்பது பெரும் புண்ணியமாகும். ஆகையால் ஏழைகளுக்குத் தொழில் பாடசாலைகள் ஏற்படுத்தித் தொழில் கற்றுக்கொடுப்பதைப்போன்ற புண்ணியம் தற்காலத்தில் வேறில்லை. இதற்குத் தற்காலம் பெரும் பொருள் சத்திர ஐவேஜுகளிலேயே காணலாம். அதுவே தர்மமாகும். அதுவே "பிழைக்கும் வழி" கற்பிக்கச் சாதனமாகவேண்டுவது.

---

## THE MANGO.
## மாம்பழம்.

---

நம்முடைய விவஸாயிகள் பெரும்பாலும் அவர்களுக்கும், அவர்களுடைய கால்நடைகளுக்கும், ஆகாரத்துக்கு வேண்டிய வினை பொருள்களையே பயிர் செய்கிறார்களே ஒழிய, ஒரு பயிரைச்செய்தால் அதனால் அதிக லாபம் அடையலாமென்று எண்ணிச் செய்வதில்லை. இதற்குக் காரணம் வழக்கமும், அறியாமையுமேயாகும். கொஞ்ச காலமாகத்தான் சில திறமையுள்ள விவஸாயிகள் பருத்தி, மணிலாக்கொட்டை முதலிய விலை உயர்ந்த பயிர்களை சாகுபடிசெய்து நல்ல லாபம் உண்டென்று கண்டுகொண்டிருக்கிறார்கள். இவைகளைப்போல அனேக பயிர்கள் செய்ய இடமிருக்கிறது என்று "கிருஷிகன்" பத்திரிகை எழுதுகிறது. உதாரணமாக மாம்பழத்தை எடுத்துக்கொள்ளுவோம்:—

"பட்டணங்களில் ஒட்டு மாம்பழங்களை அதிக விலை கொடுத்து ஜனங்கள் வாங்குவது சில நாட்டுப்புறத்துக் கிருஷிகருக்குத் தெரியாமல் போனாலும், அனேகருக்கு அது நன்றாய்த் தெரிந்திருக்கும். பம்பாயிலிருந்து வியாபாரிகள் மாமரங்களிருக்கும் ஊர்களுக்கெல்லாம் போய் அங்கே வருஷா வருஷம் கிடைக்கக்கூடிய மாம்பழங்கள் முழுமையையும், குத்தகையாய் விலைபேசி வாங்கிப் பழுக்கும் முன்னமே மூங்கில் கூடைகளில் அடைத்து, ரெயில் மார்க்கமாய் பம்பாய்க்கு ஒவ்வொரு நாளும் அனுப்புவதை, ரெயில்வே ஸ்டேஷன்களிலும், கிராமங்களிலும் பார்க்காதவர்களுண்டோ? அப்படி அனுப்பும் மாம்பழங்களுக்கு அந்த வியாபாரிகள் மிகவும் உயர்ந்த விலை கொடுக்கிறார்கள் என்பதும் எல்லாருக்கும் தெரியும். இந்த பம்பாய் வியாபாரிகள் வருவதற்குமுன் நம் ஊர்களில் மாம்பழம் வெகு ஸரஸமான விலைக்கு விற்கப்பட்டு வந்தது. இப்போதோ என்ன விலை கொடுத்தபோதிலும் நல்ல மாம்பழங்கள் கிடைப்பதில்லை. இப்படி இருப்பதற்குக் காரணம் பம்பாய் வியாபாரிகள் தானென்று எல்லாருக்கும் தெரியும். என்றாலும் யாராவது அந்தந்த ஊர்களில் மாமரங்கள் முன்னமே உண்டாகும் இடங்களுக்குப் பக்கத்தில் புதிதாய் ஒட்டு மாங் கன்றுகளைத் தருவித்து வைத்து விர்த்தி செய்கிறார்களா? அப்படிச் செய்பவர்கள் வெகு சொற்ப பேர் தானிருப்பார்கள். எல்லாரும் ஏன் இதில் முயற்சி செய்வதில்லையென்றால் அவர்களின் அறியாமையும், ஊக்கமில்லாமையுந்தான் காரணம்."

மாம்பழத்தில் நல்ல லாபம் உண்டென்பதை அக்டோபர் மாஸத்துக் "சமத் தொழில்" விளக்கத்தில் பிரசுரமாயிருக்கும் ஒரு சிறு வியாஸத்தினால் அறியலாம். ஜெமெய்கா என்னும் தீவில் கார்டனர் என்பவருடைய மாந்தோப்பிலுள்ள ஒரு மரத்தின் வரும்படி வருஷ மொன்றுக்கு 1,050 ரூபாயாம். இந்தத் தீவில் முதலில் மாமரங்களே கிடையாது. லங்கையில் கவர்னராயிருந்த ஸர் ஹென்றி ப்ளேக் என்பவர் ஜெமெய்காவுக்குக் கவர்னரா யிருந்தபோது, இந்தியாவிலிருந்து சில மாங்கன்றுகளை அங்கே கொண்டுபோய் நடச்செய்தார். அவைகள் மூலமாய் உண்டான கன்றுகளே இப்பொழுது அந்தத் தீவில் நன்றாய்ப் பலித்து நல்ல லாபத்தைத் தருகின்றன. இந்த மரங்களில் 'பம்பாய்' அல்லது 'பீட்டர்' என்ற ஜாதி ஒன்று மிகவும் சிறந்தது. இது நன்றாய்க் காய்க்கும். தண்ணீர் வரட்சியைத்தாங்கும். இதன் பழங்கள் சீக்கிரத்தில் அழுகிப்போவதில்லை. ஆகையால் அவைகளை தூரதேசங்களுக்கு ஏற்றுமதி செய்து நல்ல லாபம் சம்பாதிக்கலாம். ஒரு பழம் ஒரு ராத்தல் முதல் ஒன்றரை ராத்தல் நிறை இருக்கும். லண்டன் பட்டணத்தில் பழம் ஒன்றுக்கு ரூ 3-2-0 முதல் ரூ 4-0-0 வரையில் விலைபோனதாகவும் சொல்லப்படுகிறது. இப்படிப்பட்ட விலையுயர்ந்த பயிர்களை ஆராய்ந்து பார்த்துப் பயிர் செய்தால் விவஸாயிகள் எவ்வளவு நல்ல ஸ்திதியில் இருப்பார்கள்?

## THE BOYS' SECTION.

## சிறுவர் பகுதி

A GLUTTON.

**தூரப்பாட்டு ராமன்.**—ஹெரிபோட்ஷயர் என்ற இடத்தில் பள்ளிக்கூடத்துப் பிள்ளைகள் நடத்திய சிறு விருந்துக் கொண்டாட்டத்தில் ஒரு சிறுவன் 20 துண்டு ரொட்டி தின்று 14 கோப்பை டீ குடித்தானாம்.

SMELLING.

வாசனையால் அறிதல்.—காற்று தன் வாட்டமாயிருந்தால், மனிதன் அரைமைலில் இருக்கும்போதே நரி வாசனையால் தெரிந்துகொள்ளும். எலி பால் கட்டி 50-அடி தூரத்தில் இருப்பதை முகர்ந்து தெரிந்துகொள்ளும். மான் எவ்வளவு அயர்ந்த தூக்கத்தில் இருந்தாலும் மனிதன் 200-அடி தூரத்தில் இருப்பதை உஸ்வாஸத்தால் அறிந்துகொள்ளும்.

THE MONKEY'S HABIT.

**குரங்கின் குணம்.**—குரங்குகளுக்குப் பரிகாஸ புத்தி ஜாஸ்தி. மனிதன் செய்யும் காரியங்களைத் தாமும் செய்யமுயலும். பழகின குரங்கானது எஜமானன் க்ஷவரம் செய்துகொள்வதைப் பார்த்து அவன் போன பிறகு தானும் க்ஷவரம் செய்யமுயலும். அவன் தலைப்பாகை வைத்துப் போவதைப் பார்த்துத் தானும் ஏதையாவது எடுத்துத் தலையின் பேரில் கவிழ்த்துக்கொள்ளும்.

THE HABITS OF THE JACKAL.

**நரியின் வழக்கம்.**—நரிகள் காடுகளில் கூட்டம் கூட்டமாய்ச் சேர்ந்து வஸிக்கும். ஒரு நரி நண்டு பிடிக்கும்பொழுது முதலில் தன் வாலை வளையில் விட்டுப்பார்க்கும். நண்டு இருந்தால் அது நரியின் வாலை இறுகப் பிடித்துக்கொள்ளும். நரி உடனே அதை வெளியில் இழுத்துத் தின்றுவிடும். நரிகள் தனிமையான இடத்தில் ஒரு மனிதனைக் கண்டால் அவன் கண்களின்பேரில் மண்ணைக் கால்களினால் வாரிப்போட்டுத் தூத்தும். சில ஸமயங்களில் ஒன்றாகச் சேர்ந்து கொன்றும் விடும்.

AN EXHIBIT.

ஒரு காக்ஷிப் பொருள்.—அலஹாபாத்தில் நடக்கப்போகும் பொருட்காக்ஷிச் சாலைக்கு ஜோகேந்திர நாத் சட்டர்ஜீ என்ற ஒரு வங்காள வாலிபன் ஒரு போஸ்டு கார்டைக் காட்சிப் பொருளாய் அனுப்பியிருக்கிறான். அதன் விசேஷம் என்னவென்றால் அந்தக்கார்டில் அவனுடைய பேர் உள்பட 320¼ வரிகள் எழுதப்பட்டிருக்கின்றன. அக்கார்டில் அடங்கியமொத்த வார்த்தைகள் 9,380. இந்த வார்த்தைகளிலுள்ள அக்ஷரங்கள் 40,991. அந்தக் கார்டில் இருப்பதை ஸாதாரணமாய்ப் படிக்க முடியாது. பூதக்கண்ணாடி வைத்துத் தான் படிக்க முடியும். இவ்வளவு நுட்பமாய் எழுதும் திறமை ஜோகேந்திரநாத்துக்கு எவ்விதம் வந்ததோ? ஆச்சரியம்!

PEN AND INK IS WIT'S PLOUGH.

வல்லவனுக்குப் புல்லாயுதம்.—பெரியோர்கள் தமது காரியங்களை முடிக்கும்பொழுது கருவிகளின் விசேஷங்களைக் கவனிப்பதில்லை. அவைகள் எம்மாதிரியான குணமுடையவைகளாக இருந்தாலும், அவைகளின் மூலமாகவே தம்மாலியன்றவகையில் பிரயோஜனம் பெற்றுத் தமது காரியங்களை வெகு சாமர்த்தியமாக முடித்துக்கொள்வார்கள். திறமையில்லாத ஒருவனே தன் கருவிகளைக் குற்றங்கூறுவான். ஆதலால் ஒரு காரியத்தை முடிப்பதற்கும், ஆயுத ஸகாயம் வேண்டியிருந்தபோதிலும், அவைகளைக் கிடைத்தவரையில் வைத்துக்கொண்டு, தமது திறமையாலேயே தமது காரியங்களைப் பெரியோர் முடிப்பார் என்பதே இப்பழமொழியின் கருத்து.

SOME HYGIENIC RULES.

**சில ஸுகாதார விதிகள்.**—சரீர ஸுகத்திற்கு ஐந்து விதமான விதிகள் சொல்லப்படிருக்கின்றன.

1. ஸுகமான போஜனம் இருக்கவேண்டும்.
2. சுத்தமான காற்று.
3. உடுத்திக் கொள்ளவும், போர்த்துக் கொள்ளவும், போதுமான வஸ்திரங்கள் இருக்கவேண்டும்.
4. சுத்தமாயிருக்கப்பழகவேண்டும்.
5. போதுமான உழைப்பும், அவசியமான காலத்தில் சிரமபரிகாரமும் இருக்கவேண்டும்.

ஸுகக்குறைவுண்டாவதற்கு மூன்றுகாரணங்கள்,

1. அறியாமை, 2. அஜாக்கிரதை, 3. இது கெடுதல் என்றறிந்த பின்னும் மறுப்பது.

THE THREE GEMS.

**விரும்பக்கூடிய மும்மணிக்கோவை** :—தைரியம், சாந்தம், அன்பு.

**மெச்சக்கூடிய மும்மணி** :—அரிய ஞானம், மேன்மை, தயை.

**வெறுக்கக்கூடிய மும்மணி** :—குரூரம், கர்வம், நன்றியறியாமை.

**இகழக்கூடிய முப்பொருள்** :—அற்பத்தனம், பொருமை, பாசாங்கு.

**பூஜ்யதைக்கு அருகமுள்ள முப்பொருள்** :—தெய்வக்கொள்கை, தர்மம், சுயநயமின்மை.

**ஆனந்தப் படக்கூடிய மும்மணி** :—அழகு, சுயேச்சை, கபடமின்மை.

**வேண்டக்கூடிய மும்மணி** :—தேகாரோக்கியம், துணைவர்கள், சந்தோஷமனம்.

**கொண்டாடக்கூடிய மும்மணி**—ஞானம், சாமர்த்தியம், உறுதி.

**நீக்கக்கூடிய முப்பொருள்** :—சோம்பல், வாயாடித்தனம், வீண்வம்பு.

**சண்டையிட்டுப் பெறக்கூடிய மும்மணி** :—கண்ணியம், தேசம், துணைவர்கள்.

**அடக்கி ஆளவேண்டிய முப்பொருள்** :—கோபம், நாக்கு, வேகம்.

**அனுபவிக்க சித்தமாக இருக்கவேண்டிய முப்பொருள்** :—துக்கம், அழிவு, மரணம்.

EMPEROR EDWARD AND BOOT MAKING.

**எட்வர்ட் சக்ரவர்த்தியும் பூட்ஸ்ூம்** —காலஞ்சென்ற எட்வர்ட் சக்ரவர்த்தியின் பிதாவுக்குக் குழந்தைகளை வேலைசெய்யாமல் சும்மாவிருக்க இடங்கொடுக்க இஷ்டமிருக்கிறதில்லை. ஆகவே, எட்வர்ட் அரசரின் சகோதரிகளில் ஒருவருக்குக் கிளவ்ஸ் செய்யுந்தொழில் கற்றுக்கொடுக்கப்பட்டது. மற்றொரு குமாரிக்கு நன்ருய் விசிறி செய்யத்தெரியும். வேறொரு இளவரசிக்குப் புக் பைண்டிங் வேலை தெரியும். எட்வர்ட் அரசருக்குப் பூட்ஸ்செய்யும் தொழில் கிடைத்தது. அவர் ஒரு தினத்தில் நேர்த்தியான ஒரு ஜதை பூட்ஸ் செய்துவிடுவராம். ஒருதரம், அவர் நார்பக் ஜில்லாவிலுள்ள அவருடைய ஸாண்ட்ரிங் ஹாம் எஸ்டேட்டுக்கருகே ஒரு கிராமத்தில் ஒரு கிழவன் பூட்ஸ் தைத்துக்கொண்டிருக்கண்டு, அவன் செய்யும் வேலையைப் பிடுங்கித் தான் வெகு நேர்த்தியாய்ச் செய்து காண்பித்தாராம். அந்தக்கிழவன் வேலையின் திறமைக்காக ஆச்சரியமடைந்தானும். தவிர, எட்வர்ட் அரசர் சித்திரம் எழுதுவதிலும் கெட்டிக்காரர். இவர் எழுதின ஒரு சித்திரம் ரூபா 8,000க்கு விற்கப்பட்டிருக்கிறது. நமக்குச் சக்ரவர்த்தியாயிருந்தவர் பூட்ஸ் தைத்தார் என்றால், நாம் என்னவேலைதான் செய்யக்கூடாது? திருடாமல், பொய் சொல்லாமல் எந்தத்தொழிலாகிலும் செய்து உழைத்து ஸம்பாதிப்பதனல் யாதொரு கௌரவக்குறைவும் இல்லை.

AN INTELLIGENT MOUSE.

**ஒரு யுக்தியுள்ள சுண்டெலி.**—நியூயார்க் பட்டிணத்தில் சில காலங்களுக்குமுன் தந்தி ஸ்தம்பங்கள் நடுவதற்காகத் தோண்டப்பட்ட குழியொன்றில் ஒரு சுண்டெலி விழுந்து தவித்துக்கொண்டிருக்கிறதை வேலைக்காரர்கள் பார்த்து அது எவ்விதம் வெளியில் வரப்போகிறதென்று ஆச்சரியப்பட்டு அதைக் கொல்லாமல்விட்டு என்ன செய்கிறதென்று பார்த்துக் கொண்டிருந்தார்கள். துவக்கத்தில் அனேக மணிநேரங்களாக அந்தச் சிறு பிராணி அங்குமிங்கும் குதித்துத் தாவிச் சுற்றிக்கொண்டு வந்தது. பிறகு அப்படிச் செய்வதால் பிரயோஜனமில்லையென்று உணர்ந்து, குழியின் உள்பாகத்தில் நத்தை ஓட்டைப்போல் சுற்றிச் சுற்றி வரும்படியான ஒரு வழியைத் தோண்டத் துவக்கிற்று. இரவும் பகலும் வேலை செய்துகொண்டு வந்தது. இடையில் இளைப்பாறுகிறதற்காக ஒவ்வோரிடத்தில் விசாலமான மாடங்கள்போல் செய்து அங்கே சற்று நேரம் தங்கியிருக்கும். பிறகு மறுபடியும் வேலையைத் தொடர்ச்சியாய்ச் செய்துகொண்டுபோகும். வேலைக்காரர்கள் அநேக தடவை அதற்கு அந்த மாடங்களில் தீனிவைத்தார்கள். எலி அதைத் தின்று மறுபடியும் பலத்துடனும், தைரியத்துடனும் வேலையைச் செய்யும். இப்படியாகச் சலியாது அந்தச் சிறு பிராணி மூன்று நாளில் அந்த வேலையை முடித்து நாலாம் நாளில் குழியைவிட்டு மேலேறியது. அப்போது அதைக் கவனித்துக் கொண்டுவந்த தந்தி ஆபிஸ் வேலைக்காரர்களெல்லாம் மகா சந்தோஷத்துடன் அதைக் கொண்டாடினர்கள். அற்ப பிராணியாகிய ஒரு சுண்டெலிக்கு இத்தனை மனத்தைரியமும், விடா முயற்சியும் இருக்கையில், சொற்ப காரியங்களில் மனிதர்கள் அதைரியப் படுகிறது என்ன வெட்கக்கேடு!

## THE LADIES' SECTION.
## ஸ்திரீகள் பகுதி.

NUTMEG TEST.

ஜாதிக்காயை பரீக்ஷை செய்யும் விதம்.—ஒரு ஜாதிக்காயை எடுத்து, அதை ஒரு குண்டூசியில் குத்தினால், காய் நல்லதாய் இருந்தால், குத்தின இடத்திலிருந்து எண்ணெய் வெளிக்கிளம்பிவரும்.

HEIGHT OF LADIES.

ஸ்திரீகள் வளர்த்தி.—கிரேட்பிரிட்டனில் ஸ்திரீகள் வரவர உயரத்தில் விருத்தியடைந்து வருகிறார்கள் என்று சொல்லுகிறார்கள். அவர்கள் 25 வருஷங்களுக்கு முன்னிருந்ததைவிடச் சராசரி 2 அங்குலம் உயரமடைந்திருக்கிறார்களாம்.

A BATHING TANK.

ஒரு ஸ்னானத்தொட்டி.—விண்டஹர்ஸ்ட் நகரத்தில் ஹெலன் கூல்ட் என்னும் வாலிபப்பெண் நீந்தி விளையாடி ஸ்னானம் செய்வதற்காக ஒரு தொட்டி கட்டியிருக்கிறாள். இது 140 அடி நீளமும், 60 அடி அகலமுமுடையது. இதைக்கட்டிமுடிக்க அவள் கிட்டத்தட்ட இரண்டு லக்ஷம் ரூபாய் செலவழித்திருக்கிறாளாம்.

A REMARRIAGE.

ஒரு மறு விவாகம்.—காகிநாடாவில் காமேசுவரம்மாள் என்ற ஒரு பிராம்மண கைம்பெண்ணுக்கு ஸமீபத்தில் மறு விவாகமாயிற்று. அந்தப்பெண்ணுக்கு 16 வயதென்றும், அவளைக் கலியாணம் செய்து கொண்டவரின் பேர் வியாக்ரேசுவரரென்றும், அவருக்கு 27 வயதென்றும் தெரிகிறது.

LADY SANITARY INSPECTRESS.

கல்கட்டா கார்பரேஷனுக்கு ஸ்திரீ இன்ஸ்பெக்டர்கள்.—கல்கட்டா கார்பரேஷன் ஹெல்த் ஆபீசர் (சுகாதார அதிகாரி) அந்தக் கார்பரேஷனைச் சேர்ந்த ஒரு ஜில்லாவில் ஸ்திரீகளை ஸானிடெரி இன்ஸ்பெக்டர்களாய் நியமித்துப் பார்த்து அப்படிச் செய்வதில் அனுகூலமிருக்கிறதென்று தெரிந்துகொண்டு இப்போது அந்த கார்பரேஷனைச்சேர்ந்த ஒவ்வொரு ஜில்லாவுக்கும் ஸ்திரீ ஸானிடெரி இன்ஸ்பெக்டர்களை நியமிப்பதைப் பற்றிப் பிரேரணைகள் செய்திருக்கிறார்.

WATERED MILK.

தண்ணீர் கலந்த பால்.—ஒரு பாத்திரத்திலுள்ள பாலை தண்ணீர் கலப்பான பாலென்று அறிய ஒரு சுலபமான வழியுண்டு. அதாவது, ஒரு பளபளப்பான குண்டூசியைப் பால் நிரப்பியுள்ள பாத்திரத்தில் விட்டு உடனே வெளியே எடுத்துப் பிடிக்க, பால் கலப்புள்ளதாயிருப்பின் ஊசியில் ஒட்டிக்கொண்டிராது.

A BRAVE GIRL.

ஒரு தைரியப்பெண்.—பர்மா நாட்டின் வடகிழக்கு தூரதேசத்தில் பதினாலு வயதுள்ள சிறு பெண் ஒரு பெரிய வேங்கைப்புலியைக் கொன்று வீழ்த்தியதாக டேவிட்வில்ஸன் என்பவர் ஒரு பத்திரிகைக்கு எழுதியிருக்கிறார். "நுவேபிவின்" என்ற அந்தச்சிறுமி தன் இளைய சகோதரிகளை நடத்திக்கொண்டு அடுத்த கிராமத்துக்குப் போவதற்காக ஒரு காட்டைத்தாண்ட நேரிட்டபோது ஒரு புலி திடீரென்று பாய்ந்து இளைய சகோதரியைப் பற்றித் தூக்கிக்கொண்டோடவே "நுவேபிவின்" தன் கையிலிருந்த ஒரு கைக்கோடரியோடு பாய்ந்து சென்று புலியை நெருங்கி அதன் நெற்றியில் ஒரு போடுபோட அப்புலி திகைத்து நின்றதாம். சிறுமி தைரியத்தைக் கைவிடாமல் அடிமேலடியாய் நெற்றியிலே கொத்த புலி வீறிட்டுப் பிள்ளையை நழுவ விட்டு பொத்தென்று விழுந்து செத்ததாம். "இவளல்லவோ தைரிய லட்சுமி குடிபுகுந்தவள்."

A CLEVER THEFT.

ஒரு சாதுர்யத் திருட்டு.—ஸ்திரீகள் எப்போதும் துணையில்லாமல் எங்கேயும் போகக்கூடாது. "அஞ்சாமல் தனிவழியே போகவேண்டாம்" என்பது ஆண்பிள்ளை, பெண்பிள்ளையாகிய இரு திறத்தாருக்கும் கூறிய நன்மொழி. பம்பாயில் ஒரு பிராமண ஸ்திரீ தனியாய்ப் போய்க்கொண்டிருக்கையில் ஒரு திருடன் எதிர்ப்பட்டு அவளுடைய கழுத்திலிருந்த காசுமாலையை வெடுக்கென்று அறுத்தான். ஸ்திரீ தைரியசாலியாதலால் அவனுடைய கையைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு கூவினாள். தக்ஷணமே மற்றொருவன் ஓடிவந்து "அம்மா! அவன் கையை விடுங்கள், நான் அந்தப்பயலை உதைக்கிறேன்" என்று சொன்னான். சொல்லவே அவள் நிஜமென்று கையை விட்டாள். இரண்டு திருடர்களும் நகையோடு ஓட்டம் பிடித்தார்கள். ஸ்திரீ பிரமித்து நின்றாளாம்.

THE INDIAN LADIES CONFERENCE.

**மாதர்களின் சங்கம்.**—இந்த மாஸக் கடைசியிலே அதாவது கிறிஸ்மஸ் விடுமுறை காலத்தில், பாரத ஸ்திரீ மகா மண்டலி என்ற எல்லா இந்திய மாதர்கள் சங்கத்தின் ஆதரவின் கீழ் அலஹபாத்திலே ஒரு மகில பாரிஷத், அதாவது இந்திய மாதர்களின் கான்பரென்ஸ் ஒன்று கூடப்படுமென்றும், அதற்கு நம் நாட்டிலுள்ள இந்திய ஸ்திரீகளும் (அவர்கள் எந்த வகுப்பைச் சேர்ந்தவர்களா யிருந்தாலும் ஸரி) ஆங்கிலேய இந்திய ஸ்திரீகளும் அழைக்கப்படுகிறார்களென்றும், பிரதிநிதிகளாய் வருவோர் அவர்களுடைய பேர்வைத் தமக்கு இந்த மாஸம் 15-ந் தேதிக்குள்ளாகத் தெரிவிக்க வேண்டுமென்றும், லாகூர் வாசியாகிய மிஸ்ஸ் சார்ளதேவி "சௌதாரணி" பத்திரிகைக்கு எழுதி விளம்பரம் செய்திருக்கிறார். இந்தக் கான்பரென்ஸின் தலைமையை வகிக்க இசையும்படி போபால் நாட்டு மகமதிய அரசி பீகம்சாகிபாவை செய்வதற்கு கூடியவரையில் முயற்சி செய்யப்பட்டு வருவதாய்த் தெரிகிறது.

ATTENTION TO BREATHING.

**சுவாஸம் விடுவதில் கவனம்.**—மனுஷராய்ப் பிறந்தவர்கள் தேகா ரோக்கியமுடையராய் இருப்பதற்கு முதல் முதல் சுவாஸிக்கும் காற்று நல்லதாய் இருக்கவேண்டும். சுவாஸத்தில் இருவகையுண்டு. உச்சுவாஸம், நிச்சுவாஸம். உச்சுவாஸமென்பது உள்ளே வாங்கும் மூச்சு, நிச்சுவாஸமென்பது வெளியே விடும் மூச்சு. இவ்விரண்டும் வெவ்வேறு விதமான காரணப்பொருள்கள் கொண்டது. உதாரணமாக:—சுண்டெலி யொன்றைப் பிடித்து காற்றுப்போகாத ஒரு சிறு பாத்திரத்துக்குள் போட்டு நாம் விடும் நிச்சுவாஸத்தை ஒரு குழாய் வழியாகப் பாத்திரத்தினுள் போக விட்டு சற்று நேரத்திற்கெல்லாம் பாத்திரத்தைத் திறந்து பார்த்தால் சுண்டெலி மயங்கிக்கிடப்பதைக் காணலாம். நல்ல காற்றைச் சுவாஸிப்பதில் தேகாரோக்கியத்தோடு இருக்க முடியும். இதன்றி நாம் படுத்துறங்கும் போது உச்சி முதல் உள்ளங்கால் வரையில் ஒரே மூட்டமாய்ப் போர்த்துப் படுத்து விட்டால், நிச்சுவாஸித்த காற்று வெளியேற வகையில்லாமல் திரும்ப அதுவே உச்சுவாஸக் காற்றாய் உள்ளே போகிறது. அசுத்தமான காற்றை சுவாஸிப்பதனால் தேகாரோக்கியம் கெட்டுப் போகுமென்பது அனுபவ சித்தாந்தம். ஆதலால் தாய்மார்கள் தம் குழந்தைகள் விஷயத்தில் தொட்டிலில் போட்டுப் போர்த்தும் போதோ, தூளியில்போட்டு ஆட்டும் போதோ ஜாக்கிரதையாயிருக்கவேண்டும்.

TWINS BORN UNDER SPECIAL CIRCUMSTANCES.

**இரட்டைக் குழந்தைகள் பிறந்த சில விசேஷ சந்தர்ப்பங்கள்.**—'ஸாம்பையர்' என்னுங் கப்பல் சேதமடைந்து அதிலுள்ள ஜனங்கள் சிறிய படகுகளிலும், துண்டு, துணிக்கைகளிலுமாகத் தொற்றி உயிர் தப்பி யோடும்போது, இரண்டு மரக்கட்டைகளால் இணைக்கப்பட்ட ஒரு சிறிய தெப்பத்தில், ஒரு மாது இரட்டைக் குழந்தைகளைப் பெற்றெடுத்தாள். அந்தத் தெப்பத்திலுள்ள எத்தனையோ ஆட்கள் அலையால் எறியப்பட்டும், பசியால் நலிந்தும் மடிய, இந்தப் பெண்மணியும், அவள் இரு கண்மணிகளும் தெய்வாதீனமாய் உயிர் பிழைத்து கரை வந்து சேர்ந்தார்களாம்.

சில வருஷங்களுக்குமுன் ஸ்பெயின் தேசத்து முக்கிய பட்டிணமாகிய மாட்ரிட் நகரத்தில் நடந்த ஸர்க்கஸ் ஆட்டத்தில் கார்லோ லாம்புரோ என்பவருடைய மனைவி, சிங்கம், புலி முதலிய துஷ்ட மிருகங்களோடு விளையாடிக்கொண்டிருக்கும் தருணத்தில் அவைகளின் கூண்டுக்குள்ளேயே யாவரும் திகைக்க இரட்டைப் பிள்ளைகளைப் பெற்றுகுழந்தைகளுக்காவது அவளுக்காவது துஷ்ட மிருகங்களால் யாதொரு துன்பமும் இல்லாமல் வெளியேறினளாம்.

பிராஞ்சிய ஜெர்மானிய யுத்தத்தில் மாடம் கொல்லட் என்பவள் இரண்டு குழந்தைகளைப் பெற்றெடுத்த சரித்திரம் மிகுந்த ஆச்சரியத்தைத் தரத்தக்கது. மாடம் கொல்லட் என்பவள் பிராஞ்சிய சைனியத்துக்கு ஆகார பதார்த்தம் ஸப்ளை செய்துகொண்டிருந்த கண்ட்ராக்ட்காரரின் மனைவி. ஸீடான் நகரத்தில் 2000-க்கு மேற்பட்ட ஜெர்மானிய பீரங்கிகள் வாயைத்திறந்து அக்கினியைக் கொந்தளித்துப் பிராஞ்சியப் படைகளை ஹதமாக்கும்போது கொல்லட்துரைசாணி படைமுகத்தில் தங்கியிருந்த கூடாரம் குண்டுபெற்று சிதறுண்டுபோயிற்று. அவளுக்கு துணையாய் நின்ற அவள் பர்த்தாவும் குண்டுபட்டு அவள் பக்கத்திலேயே மடிந்தான். அப்போது அந்தப் பதிவிரதை இரண்டுபெண் மக்களைப் பெற்று யாதொரு தீங்குமில்லாமல் ஆச்சரியப்படத்தக்க விதமாய் அவளுடைய இரண்டு மக்களோடும் தப்பிக் கொண்டாளாம். "முஸ்லிம் நேசன்."

# DEPARTMENTAL NOTES.
# பகுதிக் குறிப்புகள்.

## AGRICULTURAL NOTES.
## விவஸாயக் குறிப்புகள்.

A GOOD REMEDY.

ஒரு நல்ல மருந்து.—புங்கன் வேரைச் சுரண்டிப் பிழிந்து கால்நடைகளின் புண்ணுக்கு அல்லது புழுத்திருக்கும் கொம்புக்குப் போட்டால் உடனே குணப்படும்.

MANURE FOR COCOANUTS.

தென்னைக்கு உரம்.—சொற்ப காலத்தில் பலன் தரும் கீரை கத்தரி முதலிய பயிர்களுக்கே உரம் விடவேண்டுமோனல் நெடுநாள் பலன் தரும். தென்னைக்கு உரம் விடவேண்டுமென்பது சொல்லாமலே விளங்கும். புதுச்சேரியில் ஒரு தென்னைமரம் புஞ்சை நிலத்தில் இருபத்தைந்து வருஷமாகப் பாதுகாக்கப் படாமல் இருந்து அதனல் தலை சிறுத்து, அடித்தண்டு பன்னிரண்டு அங்குலமும், தலை நாலங்குலமும் இலை இரண்டரை அடி நீளமும் இருந்தது. அம்மரத்தைச் சுற்றிலும் ஆறு அடி தூரம் வெட்டி, இரண்டு ராத்தல் பிண்ணுக்கும், ஐந்து ராத்தல் எலும்புத்தூளும் போட்டுத் தண்ணீர் பாய்ச்சிவர, ஒரு வருஷத்தில் இலைவிட்டுப் பதினைந்து அடி நீளமாயிற்று. ஒன்றரை வருஷத்தில் முதல் பாளை வந்தது. அப்போது ஐந்து ராத்தல் பிண்ணுக்கும், இரண்டு ராத்தல் எலும்புத்தூளும் போடப்பட்டது. இரண்டரை வருஷத்தில் குலை பருத்து மரம் எங்கு உடைந்துவிழுந்துவிடுமோ என்று நினைக்கவேண்டியதாயிற்று. இரண்டாவது தரம் போட்ட உரத்திட்டப்படி ஒவ்வொரு வருஷமும் மூன்று வருஷம் வரையில் போடப்பட்டது. அம்மரம், நாற்பது ராத்தல் பிண்ணுக்கும், 13 ராத்தல் எலும்புத்தூளும் போட்டதற்கு நூற்றியெழுபது தேங்காய்கள் கொடுத்தது. பட்டினியால் வருந்தும் ஜனங்கள் போலும், பஞ்சத்தால் தீனி குறைந்த மாடுகள் போலும் நமது நிலங்களுக்கு உணவில்லாமல் பூஸாரம் அற்றுக் குறைந்துக் கொண்டு வருகிறது.

YOUNG COCOANUT TREES.

தென்னங்கன்றுகள்.—தென்னங் கன்றுகள் நன்ருய் வளராவிட்டால் அவைகளைப் பெயர்த்து வேறிடத்தில் குழி வெட்டி எருப்போட்டு அந்தக்குழியில் நடலாம். இப்படிப்பெயர்த்து நட்டால் கன்றுகள் நன்ருய் வளரும்.

WATER FOR CROPS.

பயிர்களுக்குத் தண்ணீர்.—ஒரு விநாடியில் ஒரு கன அடி ஜலம் பாய்ந்தால் ஒரு நாளில் கங்கையில் 189 ஏகராவும், யமுனையில் 214 ஏகராவும் பாய, தஞ்சாவூர் ஜில்லாவில் 44 ஏகரா பாய்கிறது. மைஸூரில் 35 ஏகரா பாய்கிறது. ஆவியாய்ப் போவதற்கும், மற்ற விஷயமாய் நஷ்டமாவதற்கும் இந்தியாவில் அனேக இடங்களில் ஒரு நாளுக்கு $\frac{1}{2}$ அங்குலம் அதாவது ஒரு ஏகராவுக்கு 1,815 கன அடி ஜலம் விடுவதுண்டு. நெல்லுக்கு 8 நாளுக்கு 4 அங்குலம் ஜலம் வேண்டும். ஒரு விநாடிக்கு ஒரு கன அடி 50 ஏகராவுக்குப் போதும். கோடை காலத்து தானியப் பயிருக்கு 20 நாளைக்கு 4 அங்குலம் போதும். அதாவது 14,520 கன அடி ஒரு ஏகராவுக்குவேண்டும். பம்பாய் தக்ஷிண நாட்டில் 40 ஏகரா நெல்லுக்குப்பாயும் ஜலம் 100 ஏகரா கரும்புக்கும், குளிர் காலத்துப் பயிர் 150 ஏகராவுக்கும், மழை காலத்தில் 200 ஏகராவுக்கும் போதுமாய் இருக்கிறது.—தே. வி.

IRON PLOUGHS.

இரும்புக்கலப்பை.—லங்கையிலே இரும்புக் கலப்பைகள் பழக்கத்துக்கு வரவேண்டுமென்று கிருஷிச்சங்கத்தார் விரும்புகிருர்கள். அங்கங்கேயுள்ள கிளைச்சங்கங்கள் மூலமாகவே ஒவ்வொரு இடத்திலும் இதை ஒப்புக்கொள்ளச் செய்யவேண்டுமென்பது அவர்கள் கருத்து. சில கிளைச்சங்கங்கள் இதைப்பரீட்சித்துத் தாய்ச்சங்கத்தின்யோசனை தகுதியானது தானென்று கண்டிருக்கின்றன. தென்மாகாணக்கிளைச் சங்கமொன்று திசா என்னும் இடத்திலே இந்தக்கலப்பையை உபயோகித்துப்பார்த்து அதனல் அதிக நலமுண்டென்று கண்டிருக்கிறது. லங்கைக் கிருஷிச்சங்கத்தவரால் நியமிக்கப்பட்ட இரு உபாத்திமார் அங்கே இந்தப்பரீட்சையை நடப்பித்து ஜனங்களுக்கு ருசிகாட்டி வருகிருர்கள்.

THE WEIGHT OF SOME ANIMALS.

சில மிருகங்களின் நிறை.

| | அந்தர் | |
|---|---|---|
| யானையின் தூக்கம் | 60 = 6720 | ராத்தல் |
| பீரங்கி இழுக்கும் குதிரை | 11 = 1232 | ,, |
| ஸவாரிக் குதிரை | 8 = 895 | ,, |
| விவஸாயக் குதிரை | 14 = 1568 | ,, |
| ஒட்டகம் | 10½ = 1176 | ,, |
| சிறிய எருது | 6 = 672 | ,, |
| பெரிய எருது | 10 = 1120 | ,, |
| பசு | 6½ = 728 | ,, |
| பன்றி | 3½ = 392 | ,, |
| பெரிய பன்றி | 3¾ = 420 | ,, |
| ஆடு | 65 | ,, |
| பெரிய ஆடு | 90 | ,, |

REMISSION PETITIONS.

**தீர்வை வஜா மனுக்கள்.**—ஸமீபத்தில் நம்முடைய ராஜதானி சட்ட ஸபையின் மீட்டிங் கொன்று நடந்தது. அதில் ஆனரபில் மிஸ்டர் கேசவப்பிள்ளை, சாவிக்காக ரெவினியூ வஜா செய்ய வேண்டி வரும்போது, விவஸாயிகள் முன்னதாக மனுச் செய்துகொள்ள வேண்டுமென்ற ஒழுங்கை மாற்றவேண்டுமென்று பிரேரணை செய்தார். மிஸ்டர் கேசவப்பிள்ளை கொண்டு வந்த தீர்மானம் விவஸாயிகளின் நன்மைக்கு அவசியமா யிருந்தாலும், அதை கவர்ன்மெண்டு மெம்பர்கள் ஒப்புக்கொள்ள வில்லை. ஆனரபில் மிஸ்டர் அட்கின்ஸன் விவஸாயிகள் மனுச்செய்துகொள்ள வேண்டுமென்ற ஒழுங்கை எடுத்து விட்டால், அவர்கள் இப்போதைவிட அதிகமாய்க் கிராமக் கர்ணங்களுடைய தயவை யண்டினவர்களாகிக் கஷ்டப்படுவார்களென்றார். வஜாவை வேண்டும் விவஸாயிகள் அதிகாரிகளுக்கு விண்ணப்ப மூலமாய்த் தெரிவித்துக் கொள்ளாவிட்டால், அதிகாரிகள் கர்ணம் ரெவினியூ இன்ஸ்பெக்டர் இவர்கள் சொல்லுகிறபடி செய்யவேண்டி வருமாகையால், விவஸாயிகளின் நிலைமை இன்னும் கெட்டுப்போமென்றும் சொன்னார். இப்படிச் சொன்னதில், சிறிது உண்மை இருக்கிறதென்றே ஒப்புக் கொள்ள வேண்டும். ஆயினும், உண்மை எப்படி என்று அவ்வவ்விடத்து அனுபோகத்தைக் கொண்டு தெரிந்துகொள்ள வேண்டியதாகையால், மிஸ்டர் கேசவப் பிள்ளையின் தீர்மானத்துக்கு 17 பிரதிநிதி மெம்பர்கள் ஸாதகமாய் வோட்டுக் கொடுத்ததைக் கவர்ன்மெண்டார் கவனிக்கவேண்டும். இந்த 17 மெம்பர்கள் அனைவரும் அனுபோகஸ்தர்களாயும் விவஸாயிகளின் நிலைமையை அறிந்தவர்களாயும் இருப்பதால், அவர்களுடைய அபிப்பிராயத்தைக் கவர்ன்மெண்டார் அசட்டை செய்யக்கூடாது.

DISEASES OF PLANTS.

சேடிகளின் நோய்கள்.—காப்பிச் செடிகளுக்கு கருப்பு என்பதாக ஒரு கொள்ளை நோய் உண்டாவது ஸகஜம். இது செடிகளின்மேல் கறுப்பான தாரைப் பூசினால் எப்படித்தோற்றுமோ, அவ்விதமாய் ஒரு விதக் கறுப்பான சிறிய பூச்சிகளுண்டாய் வெகு சீக்கிரத்தில் செடிகளையே பாழாக்கிவிடுகின்றன. இதற்கு இன்னும் தகுந்த ஔஷத முறைகண்டு பிடிக்கப்பட வில்லை. நீலகிரி மலையில் உள்ள காப்பித் தோட்டங்களில் இந்த வியாதி தோன்றி செடிகளைப் பாழாக்கித் தோட்டக்காரர்களை நஷ்டத்திற்குள்ளாக்குகிறது. கரும்பு, சோளம் முதலிய சில பயிர்களுக்கும் சோகை என்பதாக ஒரு விதமான காய்ச்சல் நோய் திடீரென்று கண்டு, தோகை அல்லது தழைகளை வரட்டி, வெளுக்கச்செய்து பயிரையே பாழாக்கிவிடுகிறது. உருளைக் கிழங்குப் பயிர்களுக்குப் புள்ளி நோய் என்பதாக ஒரு வியாதி தோன்றுவதுண்டு. அவரையை மசி என்பதாக ஒரு விதப் பூச்சிகள் விழுந்து பாழாக்குவதுண்டு. இவ்விதமாய்ப் பயிர்களுக்கும், செடிகளுக்கும், நேரும் வியாதிகளுக்கும், கால் நடைகளுக்கு உண்டாகும் கொள்ளை நோய், கோமாரி, முதலியவைகளுக்கும் காரணங்களை யறிந்து தக்க பரிகாரங்களையும், முறைகளையும் அறியவேண்டியது விவஸாயிகளின் கடமை. இவைகளின் விஷயமாகப் பரிசோதனைகள் செய்து சிகிச்சை செய்ய கவர்ன்மெண்டார் நிபுணர்களை நியமித்திருக்கிறார்கள். ஆகையால் மேலே சொல்லப்பட்ட விதமாய் ஏதாவது தொந்தரவு நேரிட்டால் உடனே விவஸாய இலாக உத்தியோகஸ்தருக்கு எழுதிப் பரிஹாரத்தைத் தேடிக்கொள்ளவேண்டும்.

## INDUSTRIAL NOTES.

## கைத்தொழில் குறிப்புகள்.

BONE.

எலும்பு.—இதைக் கடைசல் பிடித்துக் குமிழ்கள், கைப்பிடிகள், 'பொத்தான்' முதலிய ஸாமான்கள் செய்யலாம். இதைத் தீயிற்சுட்டால் எலும்புக் கரியாகும். எலும்புக் கரியானது சர்க்கரையைச் சுத்தப்படுத்துவதற்கு உபயோகப்படும்.

AN INDUSTRIAL CONFERENCE.

ஒரு தொழில் ஆலோசனைக் கான்பரேன்ஸ்.—அடுத்து வரும் மாரிகாலத்தில் பஞ்சாப் நாட்டில் மாகாணத்தொழில் ஆலோசனைக் கான்பரென்ஸ் ஒன்று கூட்டப்படுமென்றும், அந்த கான்பரென்ஸின் தலைமையை லெப்டினன்ட் கவர்னர் ஸர் லூயி வகிப்பாரென்றும் தெரிகிறது.

A SPINNING AND WEAVING MILL.

ஒரு நூற்பு நெசவு மில்.—கோயமுத்தூரில் ஸமீபத்தில் காளேசுவரர் தொழிற்சாலையென்ற பேருடன் ஒரு நூற்பு நெசவு யந்திரத் தொழிற்சாலை கோயமுத்தூர் கலெக்டர் மிஸ்டர் கில்மானால் திறக்கப்பட்டது. அந்தத் தொழிற்சாலையை ஸ்தாபிக்கும் யோசனைக்கு மூலகாரணமாயிருந்தவர் மலையாள நூற்புத் தொழிற்சாலையின் மானேஜ்மெண்டை வகித்துப்பார்க்கும் தேவகோட்டை ஜமீன்தார் அருணாசல செட்டியார்தானும்.

CANDLE.

மெழுகு வர்த்தி.—பல வகையான கொழுப்புக்களை உபயோகித்து வர்த்திகள் செய்கிறார்கள். திமிங்கிலத்தின் தலையிலுள்ள கொழுப்பைக் கொண்டு செய்யும் வர்த்தி உயர்தரமானது. பன்றி, ஆடு முதலியவைகளின் கொழுப்பைக் கொண்டு செய்வது மட்டமானது; மெழுகுவர்த்தியிலிருக்கும் நூல் வர்த்தியைப் பின்னியிருப்பதனால் அது எரியும்பொழுது வளைகின்றது. எண்ணெய் விளக்குகளின் வர்த்தியைப்போல அடிக்கடி அதைத் தூண்டிக்கொடுக்க வேண்டியதில்லை. அந்த வர்த்தியைச் செய்தவுடன் வெண்காரநீரில் தோய்த்துக் காயவைக்கிறார்கள். இதனால், அது சாம்பல் தட்டாமல் எரிகிறது.

THE SEMBIUM TANNERY.

செம்பியம் தோல் பதனிடுஞ் சாலை.—சென்னப் பட்டணத்துக்கு அடுத்துள்ள செம்பியத்தில் தாங்கள் ஸ்தாபித்து நடத்திவந்த க்ரோம் டானரியை (க்ரோம் முறைப்படி தோல் பதனிடுஞ்சாலையை) கவர்ன்மெண்டார் மூடி விட்டார்கள். அந்தத் தொழிற்சாலையை அவர்கள் மத்திய இந்திய நாடுகளிலுள்ள ரீவா சமஸ்தானத்துக்கு விற்று விட்டார்கள். அந்த சமஸ்தானத்தார் இப்போது பொம்பூரில் அந்த வேலையை நடத்தி வருகிறார்கள்.

A PENCIL FACTORY.

ஒரு பென்ஸில் செய்யும் பாக்டேரி.—கல்கத்தாவுக்கு ஸமீபத்தில் டாலிகன்ஜ் என்னும் இடத்தில் பென்ஸில் செய்வதற்காக ஒரு சிறு கம்பெனி ஏற்பட்டு வேலைசெய்து வருகிறது. இதற்கு முதல் ரூபாய் 46,000. அங்கேயுள்ள யந்திரத்தால் 120 க்ரோஸ் பென்ஸில்கள் செய்யலாம். ஒரு க்ரோஸ் என்பது பன்னிரண்டு டஜன் அதாவது 144 ஆனால், தற்காலம் 5,760 பென்ஸில்கள்தான் ஒரு நாளில் உண்டாக்கப் படுகின்றனவாம். இது அபிவிருத்தியானால் இந்தியா முழுவதுமுள்ள பள்ளிக்கூடங்களுக்குப் போதுமான பென்ஸில்கள் கொடுத்து உதவலாம்.

A BUTTON FACTORY.

ஒரு பொத்தான் செய்யும் சாலை.—வங்காளத்தில் பொத்தான் தொழிற்சாலை ஒன்றிருக்கிறது. ஜப்பான் நாட்டைச் சேர்ந்த ஒஸாகாசென்று பொத்தான் செய்யும் தொழிலைக் கற்றுக்கொண்டு வந்திருக்கும் மிஸ்டர் சைலேந்திர தத்குப்தா என்பவரால் இந்தச்சாலை ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. இதில் 40 வங்காளச் சிறுவர்கள் வேலை செய்து வருகிறார்கள். அத்தொழிற்சாலையில் செய்யப்படும் பொத்தான்கள் அந்நிய நாடுகளிலிருந்து வந்து இந்நாட்டில் விலையாகும் பொத்தான்களுக்கு இளப்பமாயிருக்கவில்லை எனப்படுகிறது. சிப்பிகள், கொட்டைகள், குளம்புகள், தேங்காய்க் கொட்டாங்கச்சிகள், கொட்டைப் பாக்குகள் இவைகளெல்லாம் அந்தத்தொழிற்சாலையில் பொத்தான் செய்ய உபயோகப் படுகின்றனவாம்.

## EDUCATIONAL NOTES.
## வித்யா விஷயக் குறிப்புகள்.

THE POOR BOY'S FUND.

**ஏழைப் பையன்களுக்கான நிதி.**—ஏழை மாணுக்கர்களுக்குத் திரவிய ஸகாயஞ் செய்து கல்விபயிற்றுவிக்க வேண்டுமென்ற நோக்கத்தோடு சென்னப்பட்டணத்திலுள்ள சில கனவான்கள் இந்த நிதிசேர்த்திருக்கிறார்கள். 1910-11-ம் வருஷத்துக்கு ப்ரொபஸர் எம். ரங்காச்சாரியாரும், கே. பி. ராமநாதய்யரும், மிஸ்டர் வி. எஸ். சீனிவாச சாஸ்திரியாரும், கமிட்டி மெம்பர்களாக இருக்கிறார்கள். சென்னை காலேஜ்களில் படிக்கும் இந்து மாணுக்கருக்கே உதவி செய்வதாகத் தற்போது ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இன்டர் மீடியட் படிப்புக்கு மாஸம் ரூபாய் 7-ம், பி. ஏ. படிப்புக்கு ரூபாய் 10-ம், ஸ்காலர்ஷிப் கொடுத்து வருகிறார்கள். ஒவ்வொரு மாணுக்கனும் ஆறுமாஸத்துக் கொருதரம் காலேஜ் அதிகாரியிடமிருந்து தன் அபிவிர்த்தியைக் குறித்து ஸர்டிபிகேட் வாங்கவேண்டும். இந்த ஸ்காலர்ஷிப்பைப் பெறும் பொருட்டு 106-அப்ளிகேஷன் வந்ததில், 33 ஏழைப் பையன்கள் அதற்குத் தகுதியானவர்களென்று தெரிந்தெடுக்கப்பட்டார்கள். ஸீனியர் பி-ஏ. கிளாஸில் 7-பேரும், ஜூனியர் கிளாஸில் 8-பேரும், ஸீனியர் இன்டர் மீடியட் கிளாஸில் 8-பேரும், ஜூனியர் கிளாஸில் 10-பேரும் படிக்கிறார்கள். இவர்களில் 15-பேர் பச்சையப்பன் காலேஜிலும், 9-பேர் கிறிஸ்டியன் காலேஜிலும், 7-பேர் வெஸ்லி காலேஜிலும், 2-பேர் பிரஸிடென்ஸி காலேஜிலும் படிக்கிறார்கள். ஆனால் இவர்களுள் ஒரு மாணுக்கன் படிப்பை நிறுத்திவிட்டான். மற்றொருவன் வேறொரு ஸ்காலர்ஷிப்பை அபேக்ஷித்து இதை விட்டுவிட்டான். இன்னும் மூன்றுபேர் இதரவழிகளில் திரவிய ஸகாயம் பெறுவதாகத் தெரிந்ததால் அவர்களுக்கு ஸ்காலர்ஷிப் நிறுத்தப்பட்டது. ஆகையால் 28 ஏழை மாணுக்கர்கள் போன செப்டம்பர் மாஸம் வரையிலும் ஸ்காலர்ஷிப் பெற்று வந்திருக்கிறார்கள். இந்த நிதிக்கு சேர்க்கப்பட்ட மொத்தத் தொகை ரூபாய் 2,434. இது இந்தியன் பாங்கில் வைக்கப்பட்டிருக்கிறது. சென்ற செப்டம்பர் மாஸத்தில் இந்த நிதியின் கையிருப்பித் தொகை ரூபாய் 1,271-9-7.

SILK REARING.

**பட்டுப்பூச்சி வளர்த்தல்.**—மைஸூர் கவர்ன்மெண்டார் பட்டுப்பூச்சி வளர்க்கும் தொழிலை அந்த ஸமஸ்தானத்துப் பள்ளிக்கூடங்களில் பிள்ளைகளுக்கு பிரகிருதி சாஸ்திரபாடமாய் கற்றுக்கொடுக்கும்படி உத்தரவு செய்திருக்கிறார்கள். அதற்காக பெங்களூர் டாடாவின் பட்டுப் பூச்சி வளர்க்கும் பண்ணையில் கற்றிருக்கும் உபாத்தியாயர்களை தெரிந்தெடுத்திருக்கிறார்கள்.

AN INDUSTRIAL SCHOLARSHIP.

**ஒரு தொழில் ஸ்காலர்ஷிப்.**—சென்னை கவர்ன்மெண்டாரின் சிபார்சின்மேல் இந்தியா கவர்ன்மெண்டார் மிஸ்டர் டி. குமரன் நாயருக்கு, அவர் இங்கிலாண்டு சென்று பர்மிங்காம் யூனிவர்ஸிடியில் பொன், வெள்ளி, செம்பு, போன்ற உலோகங்களில் வேலைசெய்யும் தொழிலைக்கற்றுவர ஒரு ஸ்காலர்ஷிப் கொடுக்கப்படுமென்று உத்தரவு செய்திருக்கிறார்கள். இந்தியா மந்திரி மிஸ்டர் நாயர் பர்மிங்காம் யூனிவர்ஸிடியில் சேர்த்துக்கொள்ளப்படுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வார்.

A NEW UNIVERSITY IN CAPE COLONY.

**கேப் காலனியில் ஒரு புதிய ஸர்வகலாசாலை.**—கேப் காலனி என்பது தென்னுபிரிக்காவிலுள்ள குடியேற்ற நாடுகளில் ஒன்று. அங்கே அநேக இந்தியர் குடியேறி இருக்கிறார்கள். இருந்தாலென்ன? அவ்விடத்தில் நல்வாழ்க்கைக்குரிய ஸாதகங்கள் அவர்களுக்குப் பயன் படுவனவல்ல. அந்த கேப் காலனியில் க்ரூடெஸ் சர் என்ற ஊரில் ஒரு புதிய ஸர்வகலாசாலை ஸ்தாபிப்பதற்காக இரண்டு செல்வவான்கள் 5 லக்ஷம் பவுன் அதாவது 75 லக்ஷம் ரூபாய், நன்கொடை கொடுத்திருக்கிறார்கள். மிஸ்டர் ஆல்ப்ரெட்பேட் என்பவர் 2 லக்ஷம் பவுனும், ஸர் ஜூலியஸ்வெர்ன்ஹர் 3 லக்ஷம் பவுனும் கொடுத்திருக்கிறார்கள். நமது சக்ரவர்த்தியின் சிற்றப்பனுகிய ட்யூக் அப்கானுட்டு இப்போது அங்கிருந்து ஸமீபத்தில் இந்தப்புதிய ஸர்வகலாசாலை மண்டபத்துக்கு அஸ்திவாரம் நாட்டினர். அப்போது அந்த ஸர்வகலாசாலைக்குப் போதுமான ஐவேஜு கிடைத்து அது நிறைவேறுமானல், தென்னுப்பிரிக்கா வெள்ளை ஜனங்களின் ஒருமித்த வாழ்கைக்கும், புத்தி அபிவிர்த்திக்கும் காரணமாகுமென்று சொல்ல, அதற்கு இசைந்து இந்த இரண்டு பெரும் தருமங்களும் செய்யப்பட்டனவாம்.

## LITERARY NOTES.
## புஸ்தகக் குறிப்புகள்

**A Car Like Map.**

**தேர்போன்ற ஒரு படம்.**—திருஞான சம்பந்த ஸ்வாமிகளாலும், திருமங்கை யாழ்வாராலும் செய்யப்பட்ட திரு எக்கூற்றிருக்கையை வெகு சாதுர்யமாய் தேர்போன்ற படரூபமாக சுவற்றில் ஒட்டிவைக்கும்படி சென்னப்பட்டணம் இந்தியன் பேட்ரியெட் அச்சாபீஸ் போர்மனுகிய சு. ப. நாதமுனி நாயடு அவர்களால் பதிப்பிக்கப் பட்டிருக்கிறது. விலை 6 தம்படி, வேண்டியவர்கள் அவருக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

**A Famous Book.**

**ஒரு பேர்பெற்ற கதைப் புஸ்தகம்.**—மிஸ்டர் சாரத்குமார் கோஷ் என்பவர் இங்கிலீஷில் "ப்ரின்ஸ் ஆப் டெஸ்ட்டினி" என்பதாக மகா அருமையான ஒரு கதைப் புஸ்தகம் இங்கிலாந்தில் பிரசுரம் செய்திருக்கிருர். இது எல்லா ஐரோப்பியராலும் மிகவும் மெச்சப்படுகிறது. இந்தப் புஸ்தகம் நார்வே தேசத்தில் நார்வே பாஷையில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது. இந்தியர் எழுதிய இங்கிலீஷ்ப் புஸ்தகம் இதுதான் முதல் தடவையாக அந்நிய ஐரோப்பிய பாஷையில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது. மேரி அரசி அந்தப்புஸ்தகத்தை வந்தனத்துடன் பெற்றுக்கொண்டதோடு, நார்வே தேசத்து அரசியும் இதை ஆசிரியரிடமிருந்து சந்தோஷத்துடன் பெற்றுக்கொண்டிருக்கிருர்.

**A Pun.**

**ஒரு சாதுர்யவார்த்தை.**—ஒரு காலத்தில் பிரபல வித்வாஞெருவர் சீட்டுக் கவிபொன்று எழுதிக்கொண்டு தியாகம் வாங்குவதற்காக ஒரு ஜமீன்தாரிடம் போனுர். ஜமீன்தார் அவர்கள் சீட்டுக்கவியைக்கேட்டு மிக மகிழ்ந்து புலவருக்குத் தியாகம் கொடுக்க எண்ணி ஒரு வெள்ளித் தட்டில் கறுப்பு நிறம் பொருந்திய பட்டுசால்வை யொன்று வைத்து அதன்மேல் ரூபாய் 50 வைத்துப் புலவரிடம் கொண்டுவந்தார். சன்மானம் செய்தது புலவருக்குத்திருப்திகரமாக இல்லை. இன்னும் அதிகமாய்ப் பெறவேண்டுமென்னும் கருத்துக்கொண்டு "இதென்ன காரித்துப்பட்டா" என்று சொன்னுர். உடனே ஜமீன்தாரவர்கள் புலவருடைய சாதுர்யத்தை அறிந்து தக்கபடி சன்மானம் செய்தார்கள். (காரித்துப்பட்டா என்பது கறுப்புச்சால்வைக்கும் காரித்துப்புதல் என்ற அசங்கியமான செய்கைக்கும் ஆவதைக்கவனிக்க.)

## BOOKS RECEIVED.
## புஸ்தக வரவு.

**Harischandra.**

**அரிச்சந்திரன்.**—இந்த நாடகம் ராவ் ஸாஹிப் ச. பவாநந்தம் பிள்ளை அவர்களால் இயற்றப்பட்டது. விலை ரூ. 2-0-0. சென்னப்பட்டணம் ஜி. ஏ. நடேசன் கம்பெனியில் கிடைக்கும்.

**Vijiasundaram.**

**விஜய ஸுந்தரம்.**—ஒரு தமிழ் நாவல். இது ரங்கூன் பேபர் கறென்ஸி ஆபீஸ் காஷியராகிய ராவ் ஸாஹிப் திரிசிரபுரம் ம. பொன்னுஸாமி பிள்ளை அவர்கள் இயற்றியது. விலை ரூ. 2-0-0.

**New Japan.**

**புதிய ஜப்பான்.**—இரண்டாவது புஸ்தகம், சுதேசமித்திரன் பத்திராதிபராகிய ஜி. சுப்பிரமணிய அய்யர் இயற்றியது. விலை ரூ. 1-0-0. சென்னப்பட்டணம் "சுதேசமித்திரன்" ஆபீஸில் கிடைக்கும்.

**Youth and Character.**

**இளமையும் ஒழுக்கமும் அல்லது இரண்டு பிள்ளைகள்.**—இது ஒரு புதிய தமிழ் கதை. சி. ப. வெங்கடராம ஐயர், எம். ஏ. அவர்கள் எழுதியது. விலை அணு 8. இந்தப் புஸ்தகம் வேண்டியவர்கள் சென்னப்பட்டணம் திருவல்லிக்கேணி ஹநுமந்த லாலா வீதி, 22 நெம்பர் வீட்டில் சி. ப வெங்கடராம ஐயருக்கு எழுதிப்பெற்றுக்கொள்ளலாம்.

**The Ramayana.**

**ஸ்ரீமத்ராமாயணம் ஸஞ்சிகை 2.**—சென்னப் பட்டணம் ஓரியண்டல் அச்சுக்கூடத்தில் எல். வி. ராமசந்திர ஐயரால் அச்சிடப்பட்டது.

**Longman's Tamil Copy Book No. 3.**

**லாங்மன்ஸ் தமிழ் காப்பி 3-ம் புஸ்தகம்.**—பம்பாய் 8 ஹார்ன்பிரோட், லாங்மன்ஸ் க்ரீன் அண்ட் கம்பெனியில் கிடைக்கும். விலை அணு 1.

## LEGAL NOTES.
## சட்டக் குறிப்புகள்.

REVERSIONARY RIGHT.

**வார்ஸ் பாத்தியதை.**—ஒருவன் பிள்ளையில்லாமல் பெண்ஜாதியை மாத்திரம் விட்டு விட்டு இறந்து போனான். பெண்ஜாதி கோர்ட்டாரை வார்ஸ் ஸர்டிபிகேட் கேட்டபோது அவர்கள் மூன்று லக்ஷம் ரூ. ஜாமீன் கேட்டார்கள். இதற்கு ஒருவர் 88,000 ரூபாய்க்கும் இன்னொருவர் 2,25,000-க்கும் ஜாமீன் கொடுத்தார்கள். இப்படி ஜாமீன் கொடுப்பதற்காக ஜாமீன் கொடுத்த இருவரும் அந்த விதவையோடு என்ன ஏற்பாடு செய்து கொண்டார்களென்றால் அவள் தன் ஸொத்து முழு மானேஜ்மென்டையும் ஜாமீன் கொடுத்தவர்களிடத்தில் விட்டு விடவேண்டும். எல்லா விஷயங்களிலும் அவர்கள் பேச்சையே கேட்கவேண்டும். இப்படி அவள் ஜாமீன்தார் இருவருக்கும் அதிகாரப் பத்திரம் கொடுத்து விட்டாள். மேலே கண்ட ஸொத்துக்களுக்கு வார்ஸ் தாரன் எஸ்டேட்டை ஒரு ரிஸீவர் வசத்தில் ஒப்புவிக்க வேண்டுமென்று விபாஜ்யம் கொண்டுவந்தான். கேஸை விசாரித்ததில் விதவையானவள் ஸொத்து மானேஜ்மென்ட் விஷயத்தில் ஒன்றையும் காதில் போட்டுக் கொள்ளவில்லை என்றும் செலவெல்லாம் வரவைக் கொண்டு நடந்ததா, அல்லது மூல ஸொத்தைக் கொண்டு நடந்ததா என்று ஒன்றும் தெரிந்து கொள்ளவில்லை என்றும் ஏற்பட்டது. தவிர, எஸ்டேட்டை விதவையைக் கேட்டால் தான் மானேஜ் செய்யவில்லை என்றும் அவளுடைய ஏஜெண்டைக் கேட்டால் அவர்கள் தாங்கள் மானேஜ் செய்யவில்லை என்றும் சொன்னார்கள். போதாததற்கு விதவை வார்ஸ்களைக் கட்டுப்படுத்தாத சில கடன்களையும் வாங்கியிருப்பதாக ஏற்பட்டது. இவைகளை எல்லாம் உத்தேசித்து கோர்ட்டார் ஒரு ரிஸீவரை நியமிக்க உத்தரவு செய்தார்கள். விதவைக்கு வார்ஸ்தாரை மோசம் செய்யவேணுமென்ற எண்ண மொன்றும் இல்லாததால் ஆஸ்தியில் மிகுதியாகும் ஐவேஜி முழுமையையும் அவள், ஆயுஸ் முழுமையும் அடைய வேண்டுமென்றும் தீர்மானித்தார்கள். 8 மதராஸ் லா. டை. 189-ம் பக்கம்.

SRIDHANAM.

**ஸ்திரீ தனம்.**—ஒரு விதவை அவளுக்குக் கிடைத்த ஜீவனாம் சத்திலிருந்து மிகுத்து ஸொத்து வாங்கும் பக்ஷத்தில் அது அவளுடைய ஸ்ரீதனமாகும்.

ATTESTING.

**சாக்ஷிபோடுதல்.**—ஒருவன் ஒரு சாஸனத்துக்கு சாக்ஷிபோடும் பக்ஷத்தில் அதனால் அவன், ஸொத்தை விற்கிறவனுக்கு அதைவிற்க பாத்தியம் உண்டு, என்று சொல்லுவதாக எண்ணக்கூடாது.—8 மதராஸ் லா. டை. 171 பக்கம்.

DISTRIBUTION OF WATER.

**தண்ணீரைப் பங்கிடுதல்.**—ரயத்துவாரி நிலங்களுக்கு ஒருவித குறையுமில்லால் வேண்டிய ஜலத்தைக் கொடுத்துவிட்டு கவர்ன்மெண்டார் அவர்கள் இஷ்டப்படி ஸர்க்கார் ஜலதாரங்களிலுள்ள மிகுந்த ஜலத்தை எப்படிவேணுமோ அப்படிப் பங்கிடலாம்.

SALE AFTER ATTACHMENT.

**ஜப்திக்குப் பிறகு** விற்பனை.—ஒரு நிலம் ஜப்தியான பிறகு அதை ஸொந்தக்காரன் விற்றால் அந்த விற்பனை செல்லாது. ஆனால் ஜப்தியாவதற்குமுன் அதை விற்பதைப்பற்றி ஸொந்தக்காரனுக்கும் இன்னொருவனுக்கும் ஒப்பந்தம் ஏற்பட்டிருந்து ஜப்தியான பிறகு விற்றால் அதை ஒப்புக்கொள்ள வேண்டியதுதான். 8 மதராஸ் லா. டை. 197-ம் பக்கம்.

RENT RECOVERY ACT.

**ரேன்ட் ரேக்கவரி ஆக்ட்டு.**—ஒருவன் பேரில் நிலம்முழுமைக்கும் பட்டா இருந்தது. ஆனால் அவன் அந்த நிலத்தில் ஒரு பாகத்தை இன்னொருவனுக்கு விற்று விட்டான். பட்டா மட்டும் முன் இருந்தது போலவே விற்றவன் பேரிலேயே இருந்தது. பாகத்தை வாங்கினவன் இடத்திலிருந்து நேரில் ஜமீன்தார் மேல் வாரத்தை வாங்கிக்கொண்டு வந்தார். ஒருதடவை பட்டாதாரன் கொடுக்கவேண்டிய மேல் வாரத்துக்காக பட்டா நிலம் முழுமையையும் ஜமீன்தார் விற்பனைக்குக்கொண்டு வந்தார். இந்தக் கேஸில் சாஸனமாயிருந்த பாகத்தை விற்பனைக்குக் கொண்டுவந்தது பிசகென்று தீர்மானிக்கப்பட்டது. 8 மதராஸ் லா. டை. 284-ம் பக்கம்.

## SCIENTIFIC NOTES.
## சாஸ்திரீயக் குறிப்புகள்

---

BIG WAVES.

**பெரும் அலைகள்.**—சமுத்திர அலைகளில் வட அட்லாண்டிக் சமுத்திரத்து அலைகளே மிகவும் பிரமாண்டமானவைகளென்று இது வரையில் எண்ணப்பட்டிருந்தன. இங்கத்திய அலைகள் சுமார் 20-முதல் 25-அடி உயரம் வரையில் எழும்புவதாக கணக்கிடப்பட்டிருக்கின்றன. ஆனால் இப்போதோ ஆப்பிரிக்காவின் தென்கோடியான நன்நம்பிக்கை முனையில் வடமேற்குத் தென்றலினால் உண்டாகும் அலைகள் சுமார் 40-அடி உயரம் எழும்புவதாய் கணக்கிடப்படுகிறது.

FEVER IN PLANTS.

**மரஞ்செடிகளுக்கும் ஜுரம்.**—லெ க்ளேர் துய் சாப்ளோன் என்ற ப்ராஞ்சு சாஸ்திரியொருவர் ஜீவ ராசிகள் மாத்திரமல்ல, ஸ்தாவரவர்க்கங்கள் முதலியவைகளும் ஜுரத்தினால் பீடிக்கப்பட்டு சாகக்கூடுமென்று சொல்லுகிறார். காயத்தினால் ஒரு செடிக்குக் காய்ச்சல் உண்டாகலாம். காய்ச்சல் அதிகமாய் இருந்தால் அந்தச் செடி வெகு சீக்கிரத்தில் மெலிந்து வாடிவதங்கி செத்துப்போகிறது. ஷை சாஸ்திரியார் உருளைக்கிழங்குச் செடிகளைக் கத்தியால் வெட்டிக் காயப்படுத்தி அவைகளுக்கு ஜுரம் வரும்படியாகச்செய்து பரீட்சித்துப் பார்த்தாராம். ஆயினும் காயம் லேசாயிருந்தால், ஜுரம் சீக்கிரத்தில் நின்று போய் செடி பிழைத்துக்கொள்ளும். ஆனால் வியாதிப்பட்டவன் மெலிந்துபோய் பழைய தேகத்தை மறுப்படியும் அடைய வெகுநாட்செல்வதுபோல் அந்தச்செடி முன்போல் செழிப்பாய் வளருகிறதற்குச் சிலகாலம் பிடிக்குமாம்.

THE RAT'S TEETH.

**எலியின் பல்லுகள்.**—எலிகள் எப்போது பார்த்தாலும் எதையாகிலும் கடித்து நாசமாக்குகிறதை நாம் காணும்போது அந்த துஷ்ட ஜெந்துகளுக்குத் தீமை செய்கிறதுதான் பிரியமென்று தீர்மானிக்க வேண்டியதாயிருக்கிறது. ஆயினும் உண்மையைப் பரிசோதித்துப் பார்த்தால் கட்டாயத்தின்மேல் எலிகள் பண்டங்களைக் கடிக்கின்றனவென்று தெரியவருகிறது. நமது குழந்தைகளுக்குப் பிறக்கும்போது பல்லில்லை. பிறந்த இரண்டு வருஷத்துக்குள் வாய் நிறையப் பல்லுகளிருக்கின்றன. ஆயினும் அவைகள் ஏழெட்டு பிராயத்தில் விழுந்து போய் அவைகளுக்குப் பதிலாய் வேறு பற்கள் முளைகின்றன. பல்லுகள் முளைத்து பருவமடைந்த பின் அவைகள் அப்படியே நின்றுபோகின்றன. எலிகளுக்கோ அப்படியல்ல. அவைகளின் பற்கள் எக்காலமும் வளர்ந்துகொண்டேயிருக்கின்றன. ஆகையால் அவைகள் பற்களை எந்நேரமும் ராவிக்கொண்டிராவிட்டால் அவைகள் வெகு நீளமாய் வளர்ந்து போய் எலிகளுக்கு உபத்திரவத்தை யுண்டுபண்ணும். ஆனதுபற்றி ஆகாரத்துக்கு வேண்டிய காரியங்களைக் கடித்துத் தின்றபின், பற்களுக்கு வேலை கொடுப்பதற்காக மரக்கட்டை, கல், கதவுநிலை, கந்தைத்துணி, உயர்ந்த ஜவளி யென்ற வித்தியாஸம் பாராமல், அகப்பட்டதெதையும் கொந்தி நாசமாக்குகின்றன.

TEETH.

**பல்லுகள்.**—மனிதர்களுக்குப் பல்லுகள் முளைக்கும் கிரமம் பின்வருமாறு:— ஒவ்வொருவருக்கும் இரண்டு வகையான பல்லுகள் முளைக்கின்றன. முதலாவது முளைக்கும் பல்வகைக்குப் பால்பல்லுகள் என்றும், இரண்டாவது முளைக்கும் பல்வகைக்கு ஸ்திரப்பல்லுகள் என்றும் பெயர். பால்பல்லுகள் கொஞ்சகாலமிருந்து பிறகு விழுந்துவிடும். பால்பல்லுகள் மேல்தாடையில் பத்தும், கீழ்த்தாடையில் பத்துமாக குழந்தை பிறந்த ஏழுமாஸம் முதல் இரண்டு வருஷத்திற்குள்ளாக அடியில் வரும் காலக்கிரமப்படி முளைக்கும். ஏழாம் மாஸத்தில் இரண்டு முன் பல்லுகளும், எட்டாம் மாஸத்தில் பக்கத்து இரண்டு முன்பல்லுகளும், ஒருவருஷ அளவில் இரண்டு கடைவாய்ச் சிறிய முன்பல்லுகளும், ஒன்றரை வருஷ அளவில் இரண்டு கோரைப்பல்லுகளும், இரண்டு வருஷ அளவில் அடுத்த இரண்டு கடைவாய்ச் சிறிய பல்லுகளும் கிரமமாக முளைத்துவரும். பொதுவாகக் கீழ்த்தாடையில் பல்லுகள் முதலில் முளைத்த பிறகு அவைகளுக்கு ஜதையான பல்லுகள் மேல்தாடையில் முளைக்கும். ஆனால் பல்லுகள் எல்லாருக்கும் ஒரே நிதானமாய் முளையாமல், சில குழந்தைகளுக்கு சீக்கிரமாகவும், சில குழந்தைகளுக்குத் தாமதமாகவும் முளைப்பதுண்டு. பெரும்பான்மையாக இரண்டு வயதுக்குள் இருபது பால்பல்லுகளும் முளைத்துவிடும். அவைகள் ஆறு வயதுவரையில் உதவுகின்றன.

## MEDICAL NOTES.
## வைத்தியக் குறிப்புகள்.

DISCHARGE FROM THE EAR.

காதில் சீழ்வடிதல்.—ஜாதி நாரத்தம்பழரஸம், எலுமிச்சம்பழரஸம், பசுமஞ்சள்ரஸம், ஆதண்டச் சாறு, பசும்பால், நல்லெண்ணெய், விளக்கெண்ணெய், நெய் வகைக்குச்சேர் 1, அரத்தை 2, மாமஞ்சள், சதகுப்பை வகைக்கு பலம் 5. இவைகளைப் பதமாய்க் காய்ச்சி எடுத்து வைத்துக்கொண்டு தலை முழுகவும்.

SNAKE-BITE.

பாம்புகடி.—பாம்பு கடித்தவுடனே பாம்பைக் காணவிட்டாலும், அல்லது கண்டும் இன்ன பாம்பு என்று தெரியாவிட்டாலும், கடித்த இடத்தைப் பரிசோதித்துப் பார்க்கவேண்டும். அநேக பல்லுகள் வரிசையாகப்பட்டிருக்கும் குறிகளிருந்தால் அந்தக்கடி விஷப்பாம்பினுடையதல்ல. ஒரு பல்லின் குறியும் கொஞ்சதூரம் விட்டு மற்றொரு பல்லுக்குறியும் காணப்பட்டால், அதுவே விஷப்பாம்பின் கடிக்குச் சரியான அடையாளமாம். விஷப் பாம்பென்று தெரிந்தவுடனே தகுந்த சிகிச்சைகளைச் செய்யவேண்டும். "பொட்டாஸியம் பெர்மாங்கனேட்" என்ற ரஸாயனமருந்து பெரும்பாலும் பாம்பு கடிக்கு உபயோகமாகிறது.

COLD RICE.

பழையது.--நம்மவர்களுக்குள் பொழுது விடிந்து பல் தேய்த்ததும் குழந்தைகளுக்குப் பழையது போடுவது வழக்கம். சில வீடுகளில் மிகுந்த சாதத்தை தினமும் ஏற்கனவேயுள்ள பழையதோடு போட்டு வைப்பதுண்டு. இதனால் சாதம் வெகு புளிப்பாய் இருக்கும். புளித்த பழையது ஜீரணகாரி என்று சொல்லுவார்கள். ஆனால் பழைய அரிசி சமையல் செய்த பிறகு 24-மணி நேரந்தான் உபயோகப்படுத்துவதற்கு யோக்யதையுள்ள தாய் இருக்கிறதாம். 24-மணி நேரத்திற்கு மேற்பட்ட பழையதை உபயோகப்படுத்தினால் வயிற்றுவலி, வயிற்றுப் போக்கு முதலிய தொந்தரவுகள் சம்பவிக்கும். மேலும் அந்தப் பழையதில் யாதொரு சத்து மில்லை. காலரா காலங்களில் புழையது சாப்பிடக்கூடாது.

FOREIGN BODIES IN THE EAR.

காதுக்குள் வஸ்துக்கள்.—ஒரு குழந்தை ஸ்லேட் ப்பென்ஸில், குன்றுமணி, ஆமணக்குக்கொட்டை, புளியங்கொட்டை முதலிய வஸ்துக்களில் ஒன்றை காதுக்குள் செலுத்திவிட்டால் தாய் தகப்பன்மார்கள் அதிக ஆத்திரத்தோடு காதுக்குரும்பி வாங்கியை யாவது அல்லது கொண்டை ஊசியையாவது கொண்டு குடைந்து எடுக்க ஆரம்பிப்பார்கள். இப்படிச் செய்வதினால் காதுக்குள் சென்ற வஸ்து அதிக உள்ளே போய் விடுமாதலால் அதை திரும்ப வெளியேற்றுவது அதிக கஷ்டம். ஆனால் அப்படிச் செய்யாமல் இரண்டொரு நாள் தேங்காயெண்ணெயையாயது, க்ளிஸரினையாவது நாலைந்து துளி காதுக்குள் விட்டு அடைத்து வைத்திருந்து, பின்னல் சுடுதண்ணீரில் ஸோப்பைக் கரைத்து அந்தத் தண்ணீரை பீச்சாங்குழலினால் காதுக்குள் அடிக்க வேண்டும். முதலில் அழுக்கு முதலியவைகள் வெளியேறும், அவைகளுக்குப் பின்னால் மேற்படி வஸ்துவும் வெளியே வந்துவிடும். முற்றிலும் வெளியே வாராவிட்டாலும் செவித்துவாரத்தின் எதிரிலாவது வந்துவிடும். பின்பு சிறுபற்றுக் கொரட்டினால் அதை மெல்ல வெளியேற்றிவிடலாம். ஜலமடிக்கும்போது மத்தியில் நேராக அடிக்காமல், துவாரத்தின் மேல்தளத்தைப் பார்க்க அடிக்கவேண்டும். அப்போதுதான் அந்த ஜலம் அடைந்திருக்கும் வஸ்துவின் பின்பக்கம் லேசாகப் போய் திரும்ப வரும்போது அந்த வஸ்துவை இழுத்துக்கொண்டு வந்துவிடும். அப்படியில்லாமல் நேராக மத்தியில் ஜலம் அடித்தால் அடைத்திருக்கும் வஸ்து துவாரத்தின் உள்பிரிவுக்குள் சென்று விடும். அப்புறம் அதை வெளியேற்றுவது மிகக்கஷ்டம். ஜலமடித்து அந்த வஸ்து வெளியேறினவுடன் செவி துவாரத்தை நன்றாய் ஈர மில்லாமல் துடைத்து க்ளிஸரினையாவது கர்பாலிக் எண்ணெயையாவது இரண்டு நாள் காதுக்குள் விட்டு அடைத்து வரவேண்டும். சில பிள்ளைகள் காதுக்குள் ஏதாவது வஸ்துவைப் போட்டு விட்டதாக தாய் தகப்பன்மாருக்குத் தெரிந்தால் ஒருவேளை அடிப்பார்கள் என்ற பயத்தினால் சொல்லாமல் இருந்து விடுவார்கள். அப்பால் சில நாட்களுக்குள் காதுக்குள் வலி, சீழ் வடிதல், மந்தம் முதலியவையுண்டாகும். ஆகையால் பிள்ளைகள் காதில் வலியாயிருக்கிறதென்று முறையிடும்போது, காது வலிக்கு மருந்து தேடுமுன் காதுக்குள் ஏதாவது வஸ்து புகுந்திருக்கிறதா என்று முதலில் சோதித்துப் பார்ப்பது மெத்த உத்தமம்.

## PERSONAL NOTES.

## மனுஷ்யர்களைப்பற்றிய குறிப்புகள்.

J. D. ROCKEFELLER.

**ஜே. டி. ராக்பேல்லர்.**—ஜே. டி. ராக்பெல்லர் என்பவர் மண்ணெண்ணெய்க்கு அரசர். தேகபலம் குறைந்து கொண்டு வருவதால், அவரை அடிக்கடி சாராயத்தில் ஸ்நானம் செய்யும்படி வைத்தியர்கள் சிகிச்சை சொல்லியிருக்கிறார்கள்.

HON. MR. SAYID ALI IMAM.

**ஆனரபில் மிஸ்டர் ஸையத் ஆலி இமாம்.**—ஆனரபில் மிஸ்டர் ஸையத் ஆலி இமாம் ராஜப் பிரதிநிதி நிர்வாக ஸபையில் மிஸ்டர் ஸின்ஹாவுக்குப் பதிலாய் இந்திய மெம்பராக சக்ரவர்த்தி அவர்களால் நியமிக்கப்பட்டிருக்கிறார். இவருடைய நியமனத்தை இந்தியாவில் எல்லா வகுப்பாரும் பொதுவாய் நல்ல நியமனமென்று சொல்லுகிறார்கள். மிஸ்டர் ஸின்ஹாவைப்போல் இவரும் கல்கத்தா ஹைகோர்ட்டில் பாரிஸ்டராய் இருந்தவர். வங்காள கவர்ன்மெண்டுக்கு சட்ட சம்பந்தமான விஷயங்களில் ஆலோசனை சொல்லும் ஸ்டாண்டிங் கௌன்ஸெலாய் இருப்பதோடு, மாஸம் ஸுமார் 15,000 ரூபாய் சம்பாதித்துக்கொண்டிருந்தவர்.

LALA RAJA BABU.

**லாலா ராஜா பாபு.**—பாடியாலா ஸமஸ்தானத்தில் வேலையாயிருக்கும் லாலா ராஜா பாபு என்பவர் எதிர் நேராய் வரும் இரண்டு ரெயில் வண்டிகள் ஒன்றுக்கொன்று மோதிக்கொள்ளாமலிருக்க ஓர் உபாயம் புதிதாய்க் கண்டுபிடித்திருக்கிறார். அந்த ஸமஸ்தானத்து அரசருக்கு மகாராஜாவின் முழு அதிகாரமும் ஸமீபத்தில் கொடுக்கப்பட்ட அந்த விசேஷ தினத்தில், ராஜா பாபு இரண்டு மாதிரி எஞ்சின்கள் செய்து, இரண்டு பக்கங்களிலிருந்து எதிராய் ஓட்டி குறித்த இடத்தில் அவைகள் தானாகவே திடீரென்று நின்று போவதைக் காண்பித்தார். மேலும், அவர் ஸிம்லா ரெயில்வே கான்பரென்ஸிலும் இந்த உபாயத்தைச் செய்து காட்டினார்.

LORD HARDINGE.

**லார்டு ஹார்டிஞ்ச்.**—நமது ராஜப்பிரதிநிதி லார்டு ஹார்டிஞ்சும், சேனாதிபதி ஸர் ஓமூர்க்ரீயும், நவம்பர் மாஸம் 25-ம் தேதி தினம் காலையில் கல்கத்தாவின் மைதானத்தில் குதிரை ஸவாரி போனார்கள். ராஜப்பிரதிநிதியின் குதிரை எதையோ கண்டு வெருண்டு ஓடியபோது, தன்மேல் சவாரிசெய்யும் ராஜப்பிரதிநிதியைக் கீழே தள்ளிவிட்டது. இது கண்ட சேனாதிபதி சரசர வென்றோடிவந்து ராஜப் பிரதிநிதிக்கு உதவிசெய்ய முயன்றபோது தம் குதிரையும் தம்மைக் கீழே தள்ளிவிட்டது. நல்ல வேளையாய் இரண்டு பேருக்கும் யாதொரு காயமுமில்லை. தமக்கு இவ்வித அவதி நேர்ந்ததைபற்றி ஒருவருக்கொருவர் நகைத்துக்கொண்டு திரும்பினார்கள்.

MR. NATHAN STORES.

**மிஸ்டர் நேதன் ஸ்டோர்ஸ்.**—மிஸ்டர் நேதன் ஸ்டோர்ஸ் என்பவர் ஒரு அமெரிக்க ஜனோபகாரி. இவர் நியூயார்க்கிலிருந்து இங்கிலாந்துக்குச் சென்றபோது தமது குழந்தைக்கு வாங்கிக்கொடுத்த பால் அசுத்தமானதாய் இருந்து, அந்தப்பிள்ளையின் மரணத்துக்கு ஹேதுவாயிற்றென்பதை அறிந்து, இப்படி எத்தனை சிசுக்கள் அசுத்தப்பால் குடித்து இறக்க நேருமோ என்று பரிதாப சிந்தனை கொண்டார். இந்த எண்ணத்தோடு அவர் அமெரிக்காவுக்குத் திரும்பியவுடன் தமது சொந்தப் பொருள் செலவிட்டு, மாடுகள் பலவற்றை வாங்கி, அவை மேய்வதற்குரிய இடங்களைச் செப்பனிட்டு அவைகளில் அவைகளின் உணவுக்கேற்ற நல்ல செடிகளை உண்டாக்கிப் பால் வர்த்தகம் செய்யத் தொடங்கினார். வர்த்தக மென்றால் லாபம் ஸம்பாதிப்பதற்கல்ல. ஜனங்கள் சொற்ப விலைக்குச் சுத்தமான பால் பெற்றுக்கொள்ளும் கருத்தோடு அவர் இப்படிச் செய்யத் தலையிட்டார். இரண்டு லட்சம் பவுன் இந்த விஷயத்தில் செலவிட்டிருக்கிறார். இருபது வருஷமாக இந்தத் தொழிலை நடத்தி வருகிறார். தற்காலத்தில் நியூயார்க்கில் மாத்திரம் பதினான்கு பட்டிகள் உள. வருஷந்தோறும் ஒவ்வொரு நாளும் பதினாயிரம் புட்டி பால் மிகக் குறைந்த விலைக்குச் சிறுபிள்ளைகளுடைய உபயோகத்துக்காக விலைப்படுகிறது. அந்த அற்பக் கிரயத்தைக் கொடுக்க முடியாதவர்களுக்குக் கிரய மில்லாமலும் பால் கொடுக்கப்படுகிறது. இன்னும் பல இடங்களில் இப்படி பால் சாலைகள் அமைப்பதற்கும் முயற்சி செய்கிறார்.

## FUN AND ANECDOTE.
## வேடிக்கையும் துக்கடாக்கதைகளும்.

WANTS HIS WAGES.

**கூலி கேட்கிறன்.**—கூலிக்காரன் (எஜமானனைப் பார்த்து) ஐயா! கூலி கொடுத்தால் தேவலை, எஜமான் தயவுபண்ணவேணும், வேலைசெய்து ஒரு மாமாங்கம் ஆகப்போகிறது; காலும் நோவெடுத்துக்கிட்டுது!

எஜமான்:—எலே! காரியமாய் வெளியில் போகுறேன், சுருக்க நம்ப வீடுபோய் நேற்று ஓடிமோத்தினவன் கூலிக்குக் காத்திருக்கான், அந்த அடையாளஞ்சொல்லி சம்பளம் வாங்கிக்கோ! ஓடு! ஆ!

WANTS TO TAKE MEDICINE.

**மருந்து சாப்பிட வேணுமாம்.**—ஒரு நோயாளி ஒரு செல்வவானை நோக்கி:

"ஐயா! நான் ஒரு ஏழை நோயாளி. இந்த இருமலுக்கு வைத்தியர் ஒரு மருந்து சாப்பிடச் சொல்லுகிறார். அதற்கு—"

"அந்த மருந்தை வாங்கிக்கொடுக்கும்படி கேட்கிறாயோ?" என்று படபடப்புடன் செல்வவான் தடுத்துக்கேட்டான்.

"இல்லை, ஐயா, இல்லை; மருந்து வாங்கி ஆகிவிட்டது. அதைத்தினந்தோறும் காலையிலும், மாலையிலும் போஜனத்துக்குப் பிறகு சாப்பிடவேண்டுமாம். போஜனத்துக்குத்தான் தாங்கள் ஏற்பாடு செய்யவேண்டும்!

A TALUK OFFICE CLERK.

**ஒரு தாலூகா ஆபீஸ் கிளர்க்.**—சற்று நேரம் சென்று வந்த ஒரு கர்ணத்தைப் பார்த்து வெகு கோபத்துடன், ஓய்! ஏன் இவ்வளவு நேரம்? உமக்கு இஷ்டப்பட்ட பொழுது வருவது, நான் உன் வேலைக்காரனைப் போல் காத்திருப்பதா? என் அப்பன்மேல் ஆணைப்படிக்கு உன் வேலையை நான் இப்பொழுது பார்க்கமாட்டேன். உன் வேலையை தாசில்தாரிடம் சொல்லி விடுகிறேன், ஓய் பார்த்து விடுகிறேன், அவ்வளவு அகமா நூ, நூ:

கர்ணம்.—கைகட்டி வாய்புதைத்து ஐயா, தயவு செய்யணும், கோபம் வேண்டாம், சற்று கீழே பார்த்துப் பேசுங்கோ!

கிளர்க்.—கர்ணம் வைத்த பெட்டிஷனுக்கு கீழே நாலு ஒரு அணா நாணயத்தைப்பார்த்து மனதுக்குள் மிக்க சந்தோஷப்பட்டு முதலில் தான் ஆணையிட்டதையும் மறந்து, ஸரி இனிமேல் அப்படிச்செய்யாதேயும், இந்தத்தடவை உமக்கு மாப்புவிட்டோம் என்று சொன்னார். 4-அணாவும் பைக்குச் சென்றது.

A BOUQUET EVERY DAY.

**தினம் ஒரு பூச்செண்டு.**—சில மாஸங்களுக்கு முன் ருஷியாதேசத்து கோடீசுவரர் ஒருவர், பாரிஸ் நகரத்தைப் பார்க்கத் தன்னுடைய பணிவிடைக்காரனுடன் வந்திருந்தார். அந்த அழகிய பட்டணத்தின் சந்தோஷம் அனுபவிக்கவரும் யாவரும் ஸாதாரணமாய்ச் செய்வதுபோல அந்தப் பிரபு நாடகசாலைக்குப் போகையில் தன் வேலைக்காரனிடம் பணம் கொடுத்துப் பிரதானமான நடினக்காரிக்குத் தன்போரால் ஒரு அழகிய பூச்செண்டு வாங்கிக் கொடுக்கும்படியாகக் கட்டளை யிட்டார். ஏனென்றால் அப்படிச் செய்வதுதான் பாரிஸ் பட்டணத்தின் மரியாதை என்று நினைத்தார். அந்தப்பிரபு பார்க்கவேண்டிய அதிசயங்களை எல்லாம் பார்வையிட்டானபின் பயணத்துக்கு முஸ்திப்பாயிருக்கையில், நடினக்காரி தன்னைக் காண வந்திருக்கிறதாகச் சொன்னார்கள். வரலாமென்று கோடீசுவரர் உத்தரவு கொடுத்ததன்மேல் கூத்தாடிச்சி உள்ளே வந்து, "ஐயா நீர் என்மட்டில் காட்டின ஓயாத கவலையைப்பற்றியும், அன்பைப்பற்றியும் நான் மிகவும் நன்றி அறிதலுள்ளவளாய் இருக்கிறேன்" என்றாள். அதற்குப் பிரபு "நான் உனக்கு ஒரேயொரு பூச்செண்டுதானே அனுப்பினேன். அதுவும் ஒரு மாஸத்துக்கு முந்தி அல்லவோ?" என்று ஆச்சரியத்துடன் சொன்னார். நாடகக்காரி "உம்முடைய ஊழியக்காரன் தினமும் ஒன்று கொண்டுவந்து கொடுத்தானே" என்றாள். உடனே வேலைக்காரனைக் கூப்பிட்டு விசாரித்தபோது, உண்மை வெளியாயிற்று. அவன் சொன்னதென்னவென்றால் "நான் முதல் செண்டை உமதுபோரால் கொடுத்தபோது, இந்த அம்மாள் எனக்கு ஐந்து பிரான் காசு இனாம் கொடுத்தாள். செண்டின் விலை மூன்று பிரான் காசு மாத்திரம். ஆனபடியால், அன்று முதல் என் செலவில் தினம் ஒரு செண்டு வாங்கி அம்மாளிடத்தில் கொடுத்து, ஐந்து பிரான் காசு பெற்றுக் கொண்டு வந்தேன்." என்றதும் பிரபுவும், நாடகக்காரியும் மறு வார்த்தை பேசாமல் பிரிந்துபோனார்கள்.

## CURIOSITIES.
## விநோதங்கள்.

A CURIOUS BIRTH.

அதிசயப் பிறவி.—திருநெல்வேலி ஜில்லா நாங்கனேரித் தாலுக்கா பரும்பளஞ்சி என்னும் கிராமத்தில் ஒரு பெண் கடந்த மாஸம் 24-ம் தேதியன்று ஒரேசூலில் ஒரு ஆணும், ஐந்து பெண்ணுமாக ஆறு குழந்தைகளை ஈன்றதாகவும், சிசுக்கள் உடனே மரித்துப்போனதாகவும்; தாய் அபாயஸ்திதியில் இருப்பதாகவும் ஒருவர் எழுதுகிறார்.

SEVEN BRANCHES IN A PALMYRA TREE.

ஒரு பனையில் ஏழுகிளைகள்.—நாகபட்டணத்தைச் சார்ந்த ஒடாச்சேரிக் கிராமத்தில் ஒரு பனை மரத்தில் ஏழுகிளைகள் இருக்கின்றனவாம். யாழ்ப்பாணத்தைச் சார்ந்த கொட்டைக்காட்டில் ஒரு தோட்டத்தில் ஏறக்குறைய 100 இளம் பனைகள் வளர்கின்றன. அவை ஒவ்வொன்றும் ஒன்று முதல் பத்துக்குக் குறையாத கிளைகளையுடையனவாய் இருப்பதை நேரில் கண்டதாக ஒருவர் எழுதுகிறார்.

KING'S DYING DESEASED.

வியாதியால் சாகும் அரசர்கள்.—முன் காலத்தில் யுத்தத்தில் இறவாமல் நோயால் இறந்த அரசர்களை ஸ்வர்க்கம் புகுவிப்பதற்காக, அவர்களுடைய உடம்பை தருப்பையில் போட்டு வாளால் பிளத்தல் வழக்கமாம். நான்கு வேதங்களையும் கற்று வல்ல அந்தணர் பசுந்தருப்பைப் புல்லைப் பரப்பிக் கிடத்த "உண்மையான போர்வீரராய் வேந்தர் செல்லும் உலகத்திலே செல்க" என்று அந்த உடலை வாள் வீசிப் பிளத்தல் வழக்கமாம்.

A BIG HALL.

ஒரு பெரிய ஹால்.—ஒரே கூரையுடையதாயும், நடுவில் யாதொரு விதமான தூண் முதலிய சார்புமில்லாமல் ஒரு கட்டிடம் ருஷிய நாட்டிற்குப் பிரதான பட்டிணமாகிய ஸெண்டு பீட்டர்ஸ்பர்க்கிலிருக்கிறது. அது நீளத்தில் 620 அடியும், அகலத்தில் 150 அடியுமுள்ளது. பகலில் துருப்புகள் படையிலக்கூடியதாயும், இரவில் 20,000 வத்திகளிருந்தால்தான் வெளிச்சம் கொடுக்கக்கூடியதாயுமிருக்கிறது. இது ஒரே ஒரு இரும்பு ஓட்டின் பலத்தில் நிற்கிறது.

A WATER-PROOF NEWSPAPER.

தண்ணீரில் நனையாத ஸமாசாரப் பத்திரிகை.—பிரான்ஸ் தேசத்தின் கரையோரப் பட்டினங்கள் இரண்டில் லீக்கரியர் டீயஸ் பேக்னீயோர்ஸ், லாநைட என்னும் இரண்டு பத்திரிகைகள் பிரசுரம் செய்யப்படுகின்றன. அவைகள் தண்ணீரால் சிறிதும் பழுதடையா இயல்புடைய கடுதாசியில் அச்சிடப்படுகின்றன. கடலிலாவது, ஆறு, குளங்களிலாவது இறங்கித் தொழில்புரிபவர்கள், ஸ்நானம் செய்கிறவர்கள் எல்லாரும் ஈரக்கையுடன்வைத்து வாசித்துக்கொள்ளலாம். மீன்பிடிக்காரரின் வஸதிக்காகவே அது இப்படிப்பட்ட காகிதத்தில் அச்சடிக்கப்படுகிறதாம்.

A HORSE WORTH 12,000 DOLLARS.

ஒரு குதிரையின் விலை 12,000 டாலர்.—அமெரிக்காவில் ஒரு குதிரையை வளர்த்து இங்கிலாந்துக்கு கொண்டுவந்திருக்கிறார்கள். இதன் வால் 19 அடி நீளமும், கழுத்துமயிர் 12 அடி உயரமும், நெற்றிக்கு மேல் காதுகளுக்கு மத்தியில் 4 அடி நீளமுமாய் இருக்கின்றன. இப்பேர்ப்பட்ட குதிரை பிரபஞ்சத்திலேயே கிடையாதென்று சொல்லுகிறார்கள். அது 7 அடி உயரம் இருக்கிறது. இந்த அபூர்வக்குதிரையை 12,000 டாலர்களை கொடுத்து வாங்கிக்கொண்டார்களாம். டாலர் என்றால் ரூபா 3 அணா 2 விலையுள்ள ஒரு வெள்ளி நாணயம்.

A FISH THAT SWALLOWED A CHILD.

சிசுவை விழுங்கிய மீன்.—மலையாளத்திலுள்ள பள்ளிபுரம் என்னும் ஊரில் சிலவலைஞர் ஒன்று சேர்ந்து வலைபோட்டு மீன் பிடித்தபோது ஒரு பெருத்த மீன் அகப்பட்டது. அதை வெகு சிரமப்பட்டு வெளியில் இழுத்து அறுத்தார்கள். ஆ ஆ! அவர்களது ஆச்சரியத்தை என்னவென்று சொல்வது! அந்த மீனின் வயிற்றில் யாதொரு காயமும் இல்லாமல் ஒரு பெண் சிசு காணப்பட்டது. அதற்கு 2 வயதிருக்குமாம். சிசு தண்ணீரண்டைபோய் இருக்கும்போது அந்த மீன் அந்த சிசுவை விழுங்கியிருக்க வேண்டுமென்று ஊகிக்கப்பட்டது. 2 வயது காலம் வளர்த்த புத்திரியை கேவலம் மீனுக்குப் பறிகொடுக்க நேர்ந்த பெற்றோர் இன்னாரென்பது புலப்படவில்லையாம்.

## NEWS OF THE MONTH.

### மாவஸ வர்த்தமானம்.

---

## INDIAN NEWS.

### இந்தியநாட்டு ஸமாசாரங்கள்.

---

THE INDIAN SOCIAL CONFERENCE.

**இந்திய ஆசாரத்திருத்தக் கான்பரேன்ஸ்.**—இந்திய ஆசாரத்திருத்தக் கான்பரென்ஸ் இந்த மாஸம் 29-ந்தேதி அலஹபாத் காங்கிரெஸ் பந்தலில் நடத்தப்படும். அதன் தலைமையை வகிக்கும்படி ராஜா ரம்பால் ஸிங்கைக் கேட்டு விட்டிருக்கிறார்கள்.

GUARDIAN TO H. H. THE SANKARA CHARIAR.

**சங்கராசாரியாருக்குக் கார்டியன்.**—கும்பகோணம் ஸ்ரீ சங்கராசாரியாரவர்களுக்குக் கார்டியனாய் மேற்படியூர் முதல் க்ரேட் பிளீடர் மிஸ்டர் ஏ. வி. நாராயணசாமி ஐயரைக் கார்டியன் சட்டத்தின் பிரகாரம் நியமிப்பதற்காக ஜில்லா கலெக்டரால் தஞ்சாவூர் ஜில்லா கோர்ட்டில் அப்ளிகேஷன் செய்யப்பட்டிருக்கிறது.

POSTAL PROGRESS.

**தபாலாபீஸின் அபிவிருத்தி.**—தற்காலம் நம் இந்தியாவில் 160,000 மைல்களுக்குத் தபால் மார்க்கம் ஏற்பட்டிருக்கிறது. ஸுமார் 70,000 தபால் ஆபீஸ்கள் இருக்கின்றன. 80 கோடி கடிதங்களும், பத்திரிகை முதலியவைகளும் தபால் வழியாய்ப் போகிறதாகக் கணக்கிட்டிருக்கிறார்கள். கால் அணுவுக்கு 3,000 மைல் தூரம் வரையில் கார்டுகொண்டு போய்க் கொடுக்கும்படியான ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஸகல செலவும்போக 15 லக்ஷம் ரூபாய் மீதம் ஆகிறதாம். ஸேவிங்ஸ்பாங்கி 8,000-க்கு மேல் இருக்கின்றன. 12 லக்ஷம் பேர்கள் பணம் கட்டுகிறார்கள். கோடி பவுன் மொத்தத் தொகை ஆகிறது. 2 கோடியே 50 லக்ஷம் பவுனுக்கு மணியார்டர் அனுப்பப்படுகின்றன. இந்த இலாகாவைப்போல் ஜனங்களுக்குப் பெருத்த நன்மை செய்யக்கூடிய இலாகா இந்த ப்ரிட்டிஷ் இராஜாங்கத்தில் வேறில்லை.

THE INDUSTRIAL CONFERENCE.

**தொழில் ஆலோசனை கான்பரேன்ஸ்.**—அலஹபாத்தில் காங்கிரெஸ் மகாசபை நடக்கும் ஸமயத்தை யொட்டி நடத்தப்படப்போகிற இந்தியத் தொழில் ஆலோசனைக் கான்பிரென்ஸ் உபசாரணைக் கமிட்டிச் சேர்மனாய் ஆனரெபில் பண்டித மதன் மோஹன் மாலவியா தெரிந்தெடுக்கப்பட்டிருக்கிறார். இந்த ஸபைக்கு என். ஜி. முகர்ஜி என்பவர் அக்ராஸனம் வகிப்பார். இவர் வங்காளத்தில் ஒரு பெரிய கண்ட்ராக்ட்டு வியாபாரி. மார்ட்டின் அண்ட் கம்பெனியில் பெரிய பங்காளி. சிறு ரெயில்கள் போடுவதில் நல்ல பேர்போனவர்.

SIR WILLIAM WEDDERBURN.

**ஸர் வில்லியம் வெட்டர்பர்ன்.**—அலஹபாத் காங்கிரெஸுக்குப் பிரஸிடெண்டாய்த் தெரிந்தெடுக்கப்பட்டிருக்கும் ஸர் வில்லியம் வெட்டர்பர்ன் பம்பாய் வந்து சேர்ந்து ஜே. பி பெடிட்டின் விருந்தினராயிருந்தார். அவர் இந்தியாவிலிருக்கிறவரையில் ஆனரெபில் மிஸ்டர் கோகலே அவருக்கு ப்ரைவேட் ஸெக்ரெட்டெரியாயிருப்பார். அவர் காங்கிரெஸ் தலைமையை வகித்துவிட்டு அடுத்த ஜனவரி மாஸம் 14-ந்தேதி இங்கிலாண்டுக்குப் பிரயாணமாவார்.

BACK TO HINDUISM.

**இந்து மதத்திற்குத் திரும்பி விட்டார்கள்.**—மிஸ்டர் குலாபாய் நிச்சாபாய் என்பவரும், அவர் மனைவியாரும் ஐந்து வருஷங்களுக்கு முன்னால் கிறிஸ்தவ மதத்தைச் சேர்ந்து, இப்போது இந்து மதத்திற்குத் திரும்பிவர விருப்பங்கொண்டதால், ப்ரோச் என்னும் இடத்திலுள்ள ஆரிய ஸமாஜத்தார் அவர்களுக்கு ப்ராயச்சித்தம் செய்து வைத்தார்கள். மிஸ்டர் குலாபாய், இந்து மதத்தின் உயர்ந்த கருத்துக்களையும், கொள்கைகளையும், கொஞ்சமும் அறியாமல் கிறிஸ்தவ மதத்துக்குச் சென்றார் என்றும், பிறகு ஆரிய ஸமாஜத்தார் நமது ஆரிய மதத்தின் மகிமைகளை வெகு அழகாய் எடுத்துக் காட்ட அவைகள் அவர் மனதில் ஊன்றிப் பதியும்போதெல்லாம் அவர் செய்த காரியத்திற்காகத் தீராத் துக்கம் கொண்டவராய்ப் பூர்வீக மதத்திற்குவர மனந் திரும்பிற்றென்றும், அவரைப்பற்றிய விஷயங்களை எல்லாம் விவரமாக ஆரிய ஸமாஜத்தின் முன்பு எடுத்துரைத்தார்.

THE ALLAHABAD EXHIBITION.

அலஹபாத் பொருட்காட்சி.—ஐக்கிய மாகாணப் பொருட்காட்சியை நாளது டிஸம்பர் மாஸம் முதல்தேதியில் அலஹபாத்தில் அம்மாகாண லெப்டினண்ட் கவர்னர் திறந்து வைத்தார். அக்காட்சிக்கூடம் ஒரு சிறிய பட்டணம் போல் ஜொலிக்கிறதாம். ஏழை ஜனங்கள் அக்காட்சிக்குள் சென்று வேடிக்கை பார்ப்பது சாத்தியமாகும்படி வாரத்தில் ஒரு நாள் (புதன்கிழமை யன்று) அந்த காட்சிக் கூட்டத்துக்குள்ளே போக வாங்கப்படும் கட்டணத்தைக் குறைத்து வாங்கி வருகிறார்கள். அன்று தினம் மட்டும் 4 அணு கட்டணந்தான் வாங்கப்படுகிறது.

POPULATION OF SOME COUNTRIES.

சில தேசங்களின் ஜனத்தோகை.—

| தேசங்களின் பெயர். | ஒரு சதுர மைலுக்கு ஜனத்தோகை. |
|---|---|
| ஆஸ்திரியா ஹங்கேரி | 196 22 |
| ஆஸ்திரியா | 233·031 |
| பெல்ஜியம் | 627·95 |
| டென்மார்க் | 167·58 |
| ப்ரான்ஸ் | 189·51 |
| ஜெர்மனி | 289·60 |
| இத்தலி | 303·74 |
| ஜப்பான் | 324·91 |
| நெதர்லாண்ட்ஸ் | 445·12 |
| ஸ்விட்ஸர்லாண்டு | 216·57 |
| இங்கிலாந்து, அயர்லாந்து, ஸ்காத்லாந்து. | 356·11 |
| இந்தியா | 166·62 |

மேலே கண்டிருப்பதில் ப்ரான்ஸ், ஜப்பான், நெதர்லாண்ட்ஸ், கிரேட் பிரிட்டன், இந்தியா, இவைகளின் ஜனத்தொகைக் கணக்கு 1906-ம் வருஷத்துக்கென்பதையும், மற்றத்தேசங்களின் ஜனத்தொகை 1905-ம் வருஷத்துக்கென்பதையும், நேயர்கள் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். மேற்கண்ட கணக்கால் இந்தியாவிலே ஜனத்தொகை மிகவும் குறைவு என்பது விளங்குகிறது.

RISE IN PRICES.

உணவுப்பொருள்களின் விலை.—சென்னை ஹிந்து பத்திரிகைக்கு வடஸர்க்காரிலிருந்து ஒருவர் எழுதுகிறார்.—மேற்படி விஷயத்தைப்பற்றி அனேகம் பேருக்கு அனேக விதமான அபிப்பிராயம் இருக்கிறபடியால் வட ஸர்க்காரில் உணவுப் பொருள்களின் விலையைப்பற்றிச் சென்ற 30 வருஷத்தின் ஸ்டேட்மெண்டு ஒன்று கீழே போடப்பட்டிருக்கிறது.

| | 1880-ஞு முதல் 1890 வரையில் ஸராஸரி விலை. | | | 1890-ஞு முதல் 1900 வரையில் ஸராஸரி விலை. | | | 1900-ஞு முதல் 1910 வரையில் ஸராஸரி விலை. | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| அரிசி | ரூபாய்க்கு 18 சேர் | | | ரூபாய்க்கு 13 சேர் | | | ரூபாய்க்கு 7 சேர் | | |
| நெய் வீசை | 0 | 13 | 0 | 1 | 0 | 0 | 2 | 0 | 0 |
| நல்லெண்ணெய் | 0 | 6 | 0 | 0 | 8 | 0 | 0 | 13 | 0 |
| விளக்கெண்ணெய் | 0 | 6 | 0 | 0 | 7 | 0 | 0 | 10 | 0 |
| புளி சேர் | 0 | 0 | 9 | 0 | 2 | 0 | 0 | 4 | 0 |
| உப்பு | 0 | 2 | 6 | 0 | 1 | 6 | 0 | 1 | 0 |
| மிளகாய் வீசை | 0 | 2 | 6 | 0 | 4 | 0 | 0 | 12 | 0 |
| சர்க்கரை சேர் | 0 | 4 | 0 | 0 | 4 | 6 | 0 | 7 | 0 |
| பால் | 0 | 1 | 6 | 0 | 2 | 0 | 0 | 4 | 0 |
| விறகு டன் | 3 | 0 | 0 | 5 | 0 | 0 | 10 | 0 | 0 |
| இறைச்சி சேர் | 0 | 2 | 0 | 0 | 4 | 0 | 0 | 6 | 0 |
| முட்டை டஜன் | 0 | 1 | 0 | 0 | 2 | 0 | 0 | 3 | 0 |
| வங்காயம் வீசை | 0 | 0 | 4 | 0 | 0 | 6 | 0 | 2 | 0 |

இந்த விலைகள் வட ஸர்க்காரில் மாத்திரமல்ல, ராஜதானி முழுவதும் கொஞ்சம் ஏறக்குறைய இப்படியேதானிருக்கின்றன. ஆகையால் இப்பொழுது ஜீவனோபாயத்திற்கு முன்னிருந்ததைக் காட்டிலும் மூன்றுபங்கு வருமானம் அதிகமாய் வந்தாலல்லவோ ஸுகமாய் ஜனங்கள் ஜீவிக்கலாம். வருமான மில்லாததால் அனேக ஜனங்கள் ஜீவிப்பதற்கே அதிக கஷ்டப்படுகிறார்களென்பது நமது அபிப்பிராயம்.

## FOREIGN NEWS.

## அந்நிய நாட்டு ஸமாசாரம்.

---

### WHEAT AND RICE.

**கோதுமையும் அரிசியும்.**—உலகத்தில் எவ்வளவு கோதுமை சாப்பிடுகிறார்களோ கிட்டத்தட்ட அவ்வளவு அரிசியும் சாப்பிடுகிறார்கள். 19,000 கோடி பவுண்டு (ராத்தல்) கோதுமையும், 17,500 கோடி பவுண்டு அரசியும் உலகத்தில் விளைவதாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது.

### AMERICAN COWS.

**அமேரிக்கா பசுமாடுகள்.**—அமெரிக்காவில் நல்ல பசு நாள் ஒன்றுக்கு 45 ராத்தல் பால் கொடுக்கிறது. அதாவது $4\frac{1}{2}$ காலன்—12 படி.

### TOUR ROUND THE WORLD.

**உலகத்தைச் சுற்றல்.**—வர்த்தக விருத்தியைக் குறித்து நூறு மாணுக்கர்களோடு ஜப்பானியக் கப்பலொன்று உலகத்தைச் சுற்றிவரப் புறப்பட்டிருக்கிறதாம்.

### THE WORLD'S POPULATION.

**உலகத்து ஜனத்தொகை.**—உலகத்திலேயுள்ள குடி ஜனத்தின் தொகை 150 கோடி. இவ்வளவு ஜனமும் 5,000 பாஷைகளைப்பேசி 1,100 மதங்களையனுஸரித்து வருகிறார்கள்.

### DOGS ON POLICE DUTY.

**போலீஸ் வேலையில் நாய்கள்.**—இங்கிலாந்தில் நாடிங்ஹாம் என்னுமிடத்தில், இரவில் காப்புத் தொழிலைச் செய்யும் போலீஸ்காரர் நாய்களைப் பின்னேடு வைத்துக்கொள்ளும்படி ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அந்த நாய்கள் துப்பறியும் வேலையை ஸாமார்த்தியமாய்ச் செய்யும்படி பழக்கப்பட்டிருக்கின்றன.

### A VALUABLE BULL.

**விலை உயர்ந்த காளைக்கன்று.**—ஸ்காட்லாந்தில் ஆபர்டீன் என்னுமிடத்தில் மிஸ்டர் டூதி என்பவர் தன் 8 மாதக்காளைக் கன்று ஒன்றை 16,000 ரூபாய்க்கு விற்றார். அவர் இன்னும் அநேக கன்றுகளை விற்றதில், மிகவும் குறைந்த விலைக்கு விற்றது 8,000 ரூபாய்க்குத்தான்.

### TAX ON BACHELORS AND SPINSTERS.

**கலியாணமில்லாதவர்களுக்கு வரி.**—ருஷியாவில் வயதுவந்தும் விவாகம் செய்துகொள்ளாதிருக்கும் ஆடவர்களும், பெண்களும் வரிகொடுக்க வேண்டுமென்பதாய் ருஷியாவில் ஒரு சட்டம்கொண்டுவர ஆலோசித்திருக்கிறார்கள்.

### BURNING KEROSENE.

**மண்ணெண்ணெய் பற்றிக்கொள்ளுதல்.**—இடாலி தேசத்து ஒரு வைத்தியப் பத்திரிகை, மண்ணெண்ணெய் பற்றிக்கொண்டால் அதை அவிக்க ஜலம் விடுவதைக் காட்டிலும், பாலைவிட்டால், எண்ணெயும் பாலும் கலந்து குழம்பாய்ப் போய்விடுவதால், எண்ணெய் தனியாகப் பிரிந்து எரிய இடமில்லை என்று எழுதுகிறது. வாஸ்தவந்தான். பாலுக்கு எங்கே போகிறது?

### DWARFS.

**குள்ளர்.**—நியூகினி தீவிலே ஒருவித குள்ளர்கள் இருக்கிறார்கள். இவர்களில் ஸராஸரி உயரம் 4 அடி 3 அங்குலம். இந்த ஜாதியாரின் ஸந்ததியார் அந்தமான் தீவு, மலாயாக்குடாநாட்டின் வடபகுதி, பிலிப்பையன் தீவுக் கூட்டத்தைச் சேர்ந்த லூசோன் தீவு முதலான இடங்களில் திரள்திரளாய் வாஸம் பண்ணுகிறார்கள். இவர்களில் ஆண்களின் உயரம் 4 அடிக்குமேல் இல்லை.

### HAWKING IN THE STREETS.

**தெருக்களில் ஸாமான்களை விற்றல்.**—பதிஞன்கு வயதுக்குட்பட்ட பையன்களும், பதினறு வயதுக்குட்பட்ட பெண்களும் ஸாமான்களைத் தெருவில் எடுத்துக்கொண்டுபோய் விற்கக்கூடாதென்று இங்கிலாந்தில் ஒரு சட்டம் ஏற்படுத்தப் போகிறார்கள். 1909-ஞு ஜுலை மாஸம் 14-வயதுக்குட்பட்ட 10,466 பையன்களும், 16-வயதுக்குட்பட்ட 900 பெண்களும் லண்டன் நகரத்துத் தெருக்களில் ஸாமான்களை விற்று வந்தார்களென்று ஏற்படுகிறது. அந்தப்பையன்களில் பாதிபேர்கள் ஸமாசாரப் பத்திரிகைகளைத் தெருவில் எடுத்துக்கொண்டுபோய் விற்றார்கள். பெண்களில் பாதிக்கு மேற்பட்டவர்கள் புஷ்பங்களை விற்றார்கள். இந்த விஷயத்தைப்பற்றி ஒரு பொது விசாரணை செய்யப்பட்டுவருகிறது. சீக்கிரத்தில் இதைத்தடுக்கச் சட்டம் ஏற்பட்டுவிடும்.

THE MAT TRADE IN JAPAN.

ஜப்பான் தேசத்து பாய் வியாபாரம்.—ஜப்பான் தேசத்தில் வருஷம் 1-க்கு சுமார் ஒரு கோடி ரூபாய் மதிப்புள்ள கோரைப்பாய்களை அயல் தேசங்களுக்கு ஏற்றுமதி செய்கிறார்கள். இதனால் அந்த தேசத்தில் ஸ்திரீ புருஷர்களெல்லாம் ஏராளமாய் பாய் பின்னும் வேலைகளில் ஊக்கமாயிருப்பதோடு இதைப்போல பற்பல கைத்தொழில்களிலும் சுறுசுறுப்புடையவர்களாய் இருப்பதாகத்தெரிகிறது.

LORD CREWE AT LIVERPOOL.

லார்ட் க்ரு லிவர்பூலில் பேசியது.—புதிய இந்தியா மந்திரி லார்ட் க்ரூ லிவர்பூலில் ஸமீபத்தில் பேசியபோது தமக்கு இந்தியா மந்திரி ஸ்தானம் தாம் வேண்டுமென்று கேட்டதின் மேல் கிடைக்கவில்லை என்றும், இருந்தாலும், இதற்குமுன் யாரும் குடியேற்ற நாட்டு மந்திரியாயிருந்து விட்டு, தொடுத்தாற்போல இந்தியா மந்திரியாயிருந்ததில்லை ஆகையால், தாம் அந்த ஸ்தானத்தை ஏற்றுக்கொண்டதாகவும் சொன்னார். சக்ரவர்த்தி இந்தியாவுக்கு விஜயம் செய்வதை யொட்டிப் பேசியதில் அது யாவரும் தங்கள் ஞாபகத்தில் பல்லாண்டு வைக்கக்கூடிய விஷயமாய் முடியுமென்று சொன்னார்.

PATRIOTISM IN SOUTH AFRICA.

தென் ஆப்பிரிக்காவின் தேசாபிமானம்.—தென் ஆப்பிரிக்கா முழுவதும் ஒன்றாய் ஐக்கியமாகி சுய ஆட்சி கொடுக்கப்பட்டதை அந்த தேசத்தவர்கள் மிகவும் அருமையாய்ப் பாராட்டுகிறபடியால், காலஞ்சென்ற எட்வர்டு அரசர் அந்த சுய ஆட்சியை அளித்ததாக எழுதினபோது அவர் உபயோகித்த மேஜையையும், பேனாவையையும், இங்கிப்புட்டியையும் தென்னாப்பிரிக்கா யூனியன் கவர்ன்மெண்டுக்கு பரிசளித்தார். எட்வர்டு சக்ரவர்த்தியின் தம்பியாகிய காநாட்டுக் சோமகன் முதல் யூனியன் பார்லிமெண்டைத் திறப்பதற்கு முன்னால் அந்த மேஜையையும், பேனாவையையும், இங்கிப்புட்டியையும் பார்லிமெண்டு ஹாலில் வைக்கப்படும்படி ஏற்பாடு செய்துவிட்டார்கள். இதே மாதிரியாக, கனடா பார்லிமெண்டும், ஆஸ்டிரேலியா பார்லிமெண்டும், சுய ஆட்சி பெற்ற விசேஷ ஸமயத்தை அருமையாய் ஞாபகம் வைத்திருக்கும் பொருட்டு, அதேமாதிரி சின்னங்கள் தருவித்து வைத்திருக்கிறார்கள்.

AGRICULTURE FOR JUVENILE OFFENDERS.

சிறு குற்றவாளிகளுக்கு விவஸாயம்.—ஆஸ்திரேலியாவில் விக்டோரியா மாகாணத்தில் குற்றவாளிப் பையன்களுக்கு 14 முதல் 18 வயதுக்குள் விவஸாய விஷயமான படிப்பு திறமையாயும், பிழைக்கக் கூடியதாயும் கற்றுக்கொடுக்கிறார்கள். இப்படியே அமெரிக்காவில் காமஸ்டாக் சிறைச்சாலையில் விவஸாயம் கற்பிக்கப்படும். இப்படிச்செய்வது விவஸாயத்தின் நூதனமுறைகள் பரவுவதற்கான நல்ல உபாயமென்று நாம் முன்னமேயே எழுதியிருக்கிறோம்.

BUTTER FROM COCOANUT.

தேங்காயிலிருந்து வெண்ணெய்.—ஜர்மனி தேசத்திலே சமையலுக்கு தைல பதார்த்தங்கள் அதிகம் தேவை. பசுவின் வெண்ணெய் தேவைக்குத் தக்கபடி அகப்படாததனால், அமெரிக்கா பருத்திக்கொட்டை எண்ணெயிலிருந்து வெண்ணெயுண்டாக்கி வந்தார்கள். தற்போது தேங்காயிலிருந்து மிக நேர்த்தியான வெண்ணெய் செய்யலாமெனக் கண்டு பிடித்ததின்பேரில் ஜெர்மனியிலும், பிரான்ஸிலும் அதிகமாக இந்தவேலை நடத்திவருகிறார்கள். கொப்பரையை இடித்து எண்ணெய் பிழிந்து முதல்தர எண்ணெயிலிருந்தே இது செய்யப்படும். கொப்பரையில் 100-க்கு 60 அல்லது 70 பங்கு வெண்ணெயாக்கலாமாம். இதை வண்ணார் உபயோகிக்கும் சாரமண்ணுடன் கலந்து தெர்மாமிட்டர் என்னும் சூட்டளவுக் கருவியில் 250 டிக்ரீ வரையில் சில ரஸாயன பதார்த்தங்களும் போட்டுக்காய்ச்ச, தேங்காயின்மணம் ருசிமுதலியன எல்லாம் எடுபட்டு மிக நேர்த்தியான வெண்ணெயாக வரும். சுத்தவெண்ணிறமாக பிரகாசிக்கிற வெண்ணெய் கிடைக்கும். இதிலிருக்கும் விசேஷம் எல்லாவகையான வெண்ணெய்களுக்குள்ளும் உருகுந்தன்மையில் குறைவுள்ளது. 80 டிக்ரீ அனலுக்குத்தான் உருகும். அது மாத்திரமல்ல. நல்லவாசனையுள்ளது. பழுதடையாமல் வெகுகாலத்துக்கு இருக்கும். இதின் நிமித்தமாகவே கொப்பரை அதிகமாய் மேற்குத்தேசங்களுக்கு ஏற்றப்படுகிறது. கடவுள் இயற்கையில் மனுஷனுக்குத் தேவையானவைகளை எல்லாம் அமைத்திருக்கிறார். அவைகளை எடுத்துக் கையாடிப் பிரயோஜனப்படுத்தவேண்டியது மனுஷன் கடமை.

## SEASON.
## காலஸ்திதி.

**RAINFALL.**

**மழை.**—ஏப்ரல்மீ 1-தேதியிலிருந்து, டிஸம்பர் மாஸம் 19-ம் தேதி வரையில் பெய்தமழை அளவும் இந்தக் காலத்தில் ஸராஸரியில் பெய்திருக்கவேண்டிய மழை அளவும், கீழே அங்குலம், ஸெண்டுகளாக குறிக்கப்பட்டிருக்கின்றன.

| மழை பெய்த ஊரின் பெயர். | பெய்த மழை அங்குலம். | பெய்திருக்க வேண்டிய மழை அங்குலம். |
|---|---|---|
| கோபால்பூர் | 59·58 | 46·11 |
| வால்டேர் | 54·52 | 42·70 |
| காக்கிநாடா | 38·79 | 37·66 |
| மசூலிப்பட்டணம் | 48·48 | 40·33 |
| நெல்லூர் | 32·34 | 29·53 |
| மதராஸ் | 44·22 | 47·90 |
| கூடலூர் | 42·68 | 48·30 |
| நாகப்பட்டணம் | 45·36 | 48·64 |
| பாம்பன் | 23·58 | 31·83 |
| கொழும்பு | 57·16 | 77·33 |
| திருவனந்தபுரம் | 72·14 | 59·17 |
| கொச்சி | 119·09 | 111·68 |
| கள்ளிக்கோட்டை | 106·65 | 113·82 |
| மங்களூர் | 117·78 | 123·55 |
| மெர்க்காரா | 125·91 | 125·97 |
| ஐதராபாத் | 27·63 | 30·70 |
| ரெய்ச்சூர் | 20·71 | 30·06 |
| பல்லாரி | 25·70 | 19·47 |
| கர்நூல் | 28·29 | 27·88 |
| கடப்பை | 46·23 | 32·09 |
| ஹாஸ்ஸான் | 37·35 | 34·59 |
| பெங்களூர் | 46·04 | 34·22 |
| கொடைக்கானல் | 58·66 | 51·48 |
| உதகமண்டலம் | 57·82 | .. |
| கோயம்புத்தூர் | 22·23 | 19·39 |
| வேலூர் | 61·73 | .. |
| சேலம் | 41·81 | 38·85 |
| திருச்சினப்பள்ளி | 38·31 | 30·13 |
| புதுக்கோட்டை | 37·65 | 30·13 |
| மதுரை | 39·11 | 31·33 |
| திருநெல்வேலி | 21·01 | 23·30 |

## MARKET REPORT.
## மார்க்கட் நிலைவரம்.

**COTTON GOODS IN MADRAS.**

**மதராஸில் துணி ஸாமான்கள்.**—நவம்பர்மீ 19-தேதியிலிருந்து டிஸம்பர்மீ 10வ வரையில் அந்நிய தேசங்களிலிருந்து சென்னப்பட்டணத்தில் இறக்குமதியான துணி ஸாமான்களின் விவரம்.

நூலும் முறுக்கு நூலும் 6,90,080 ராத்தல், காரிகத்துணிகள் 63,57,212 கஜம். சலவைத்துணிகள் 17,43,828 கஜம். இதர தினுசுத்துணிகள் 41,22,935 கஜம். இதேகாலத்தில் சென்னப்பட்டணத்திலிருந்து ரெயில் வழியாய் 15,805 அந்தர் துணி சாமான்கள் வெளி ஜில்லாக்களுக்கு அனுப்பப்பட்டன. ஒரு அந்தர் என்பது 112 ராத்தல். ஒரு ராத்தலுக்கு சுமார் 2½ கஜம் துணி என்று வைத்துக்கொள்ளலாம். டிஸம்பர் மாஸம் 13-ம் தேதியன்று பம்பாயில் 20-ம் நெ. காரிக நூலின் விலை ராத்தல் ஒன்றுக்கு 0-7-6 முதல் 0-8-3 வரையில் இருந்ததாகத் தெரிய வருகிறது.

**IMPORT OF SUGAR.**

**சர்க்கரை இறக்குமதி.**—சென்ற நவம்பர் மாஸம் 19-ந்தேதிமுதல் டிஸம்பர் மாஸம் 10-ம் தேதி வரையில் சென்னப்பட்டணத்தில் இங்கிலாந்திலிருந்து 87 அந்தரும, ஜாவா தீவிலிருந்து 19,569 அந்தரும், இறக்குமதியாயின.

---